இவ்வாறு வீடுபெற விழைந்த புலவர்க்கு வீடுபெற்ற விழுமிய புலவர், அதைப் பெறு நெறி தெரிப்பதே திருமுருகாற்றுப் படையென்னும் பெரு நெறிப் பாடல் என்க. நிலை பேறில்லாச் செல்வப் பொருளைப் பெறும் பொருட்டுப் புரவலர்பால் இரவலரை யாற்றுப் படுத்தும் பொருநராற்றுப்படை முதலிய பாடல்களினும், நிலைபேறுடைய பேரின்ப வீடுதரும் திருமுருகப் பெருமான்பால் ஆற்றுப் படுத்தும் இம் முருகாற்றுப்படை சிறந்து காட்டுதலின் பத்துப் பாட்டில் முதலிடம் பெற்றது. வீடு விரும்பும் புலவனை முருகன்பால் ஆற்றுப்படுத்தலைக் கூறுவதால் இப் பாடல் "புலவராற்றுப்படை" என்று பெயர் பெறுவதே முறையாயினும் இப் பாடலில் அமைந்த "முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர்" என்பதிலுள்ள "முருகாற்றுப்படுத்தல்" என்னும் சிறந்த தொடர் மொழியால் "முருகாற்றுப்படை" எனப் பெயர் பெற்றது. "கூத்தராற்றுப்படை" யென்று பெயர் பெறுவதற்குரிய பத்துப் பாட்டில் இறுதிப் பாட்டு "மலைபடு கடாம்" எனச் சிறந்த தொடர் மொழி காரணமாகப் பெயர் பெற்றிருத்தலுங் காண்க.

வீடு பேற்றை விரும்பிய புலவனுக்கு அவ்வீடு பெறும் நெறியைக் கூறும் புலவர், முதற்கண் விளக்க வேண்டியது முருகப் பெருமானுடைய இயல்பே யாகும். அவ் விறைவன் இயல்பு: உலகமே யாதலும் வேறாதலும் உலகமோடுடனாதலும் என மூவகையாக உளது. உலகத் தொடர்பற்றுத் தனித்திருக்கும் நிலையைப் 'பர நிலை' எனவும் உலகமே உருவாய் நிற்கும் நிலையைப் பெரு நிலை எனவும் உலகமும் தானுமாக நிற்கும் நிலையை "உடனிலை" எனவும் கொள்ளலாம். இம் மூவகைப்பட்ட முருகன் இயல்புகளை யுணர்ந்த புலவன் இம் மூவகையில் அவனை வழிபட்ட அடியார் இயல்புகளை யுணர விரும்புவது இயற்கை. எனவே இறைவனது மூவகை யியல்புகளையும் அடியார்களின் மூவகை யியல்புகளையும் உணர்த்துகின்றது இப் பாடல். இக் காரணத்தால் அறுவகையாகப் பகுக்கப்படுகின்றது.

இறைவனது பர நிலையைத் திருப்பரங் குன்றத்திலும் பெரு நிலையைத் திருச்சீரலைவாயிலும் அவன் உடனிலையைத் திருவாவினன் குடியிலும் உணர்த்தி, அவனை வழிபடும் ஆன்மாக்கள் மூவகையினரையும் முறையே திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை என்ற மூவிடங்களில் வைத்து உணர்த்துகின்றார். வீடு விழையும் புலவனுக்கு இங்ஙனம் முறைப் படுத்திக் கூறினால் அவன் தகுதிக்கேற்ப விழையும் இடத்தில் அம் முருகனை வழிபட்டு வீடு பெறுவான் என்பது சீவன் முத்தராம் செந்தமிழ்ப் புலவரின் நினைவு. தாம் வீடுபெற்ற பின்னர் அவனருளே கண்ணாகக் காண்கின்றார் ஆதலின் அவன் நிலைகளை யெல்லாம் எளிதில் அறியப் பெற்றார். அவ்வருள் நிலை அப் புலவனுக்கு இன்னும் எய்தவில்லை யாதலின் இவ்வாறு பல்வகை நிலையினையும் பகர வேண்டியதாயிற்று.

இறைவன் ஐந்து பூதங்களாக வுள்ளான் என்பதை யுணர்த்தும் தில்லை, காளத்தி, அண்ணாமலை, ஆனைக்கா, காஞ்சி என்னும் ஐந்து தலங்கள் இருத்தல் போல; இறைவன் உலகமாய் வேறாய் உடனாய் நிற்கும் நிலைகளை யுணர்த்தும் தலங்களும் உண்டு எனக் கொள்க.

## முருகன் திருவுருவம்.

முதற்கண் முருகப் பெருமானது திருவுருவத்தைப் பொதுவகையான் புலவனுக்கு எடுத்துரைக்கின்றார் பெரும் புலவர். சேய்மையில் நின்றும் அண்மையிற் செல்வோன் முதலில் காணத்தக்கதாக இருப்பது வடிவத்தின் ஒளியே யாதலின் அதனையே முன்னர் விளக்கி யிருக்கின்றார். பசுமையான மயிலின்மேல் செந்நிற ஒளியொடு விளங்கும் முருகப் பெருமானுக்குக், கருங் கடல் மிசைத் தோன்றும் செம்மையான இளவள ஞாயிற்றை உவமை கூறி யிருப்பது, மிகவும் பொருத்த முடையதாகும். ஞாயிறு புறவிருளைப் போக்கு வது போல முருகன் தன்னை வழிபடும் உயிர்களின் அகவிருளைப் போக்குவ தாலும் செந்நிறம் இருவர்க்கும் பொதுவாதலாலும் ஞாயிறு உலகர்க்குப் பொருள்களை விளக்குதல் போல முருகன் உண்மைப் பொருளை யறிவிப்பதா லும் சிறந்த உவமையாதலை காணலாம். அம் முருகனுடைய ஒளியை நோக்கும் வழி கண்கள் இமைத்த இமைத்துப் பார்க்க வேண்டுமாய் வேறு பொறிகளில் செல்லாது மனத்தைத் தன் வழிப்படுத்தும் தன்மையும் எழிலும் ததும்புகின்றதாம் அவ்வொளியில். இங்ஙனம் சேய்மையில் ஒளி வடிவாகப் பொது வகையான் கண்ட புலவன் அண்மையிற் சென்று கீழிருந்து மேல் நோக்குவானாயின் முதற் கண் தோன்றுவது திருவடியே யாதலின் அதன் சிறப்பை முன் விரித்துள்ளார். மேலும் சேவடி விரும்பிச் செல்லும் புலவனுக்கு முன்னர் அறிவிப்பதற்குரியதும் அதுவே யாதல் காண்க.

இனி அத் திருவடி, புலவன் எண்ணத்திற் கேற்ற தகுதிப்பாடு உடை யது என்பதையே விளக்க வேண்டுமாதலின், "உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்" என்று கூறியுள்ளார். "தன்னைச் சேர்ந்தவர்கள் தீவினையைப் போக்கி அவரைத் தாங்கும் பொருட்டு அறியாமையை உடைத்தற்குக் காரணமாகிய வலியினையுடைய திருவடி" என்பது பொருள். இதனால் அருளல் கூறினார். இன்னும் சிறிதுமேல் நோக்கின் கைகள் தோற்றம் அளிக்கும் அன்றே? அக்கைகளை, 'அழித்தற்குரியாரை அழித்தகை' எனக் கூறி இறைவனது தெறல் தன்மையை விளக்குகின்றார். அல்லோரை யடக்கல் நல்லோரைக் காத்தற் பொருட்டே யாதலின் அருளிறைக்குத் தெறலும் வேண்டியதாயிற்று. கையை நோக்கிய புலவன் அக்கையைச் சார்ந்துள்ள உருவத்தையும் காணுதல் இயற்கையே. அவ்வுருவந்தான் வள்ளி நாயகியார் உருவம், எனவே அவ்வுருவத்தையும் சேர்த்து "வாணு தல் கணவன்" என்ற பெயரால் குறிப்பிடுகின்றார். இங்கு "மறுவில் கற

பின்" என்றதால் வள்ளியம்மையாரின் அக அழகையும் "வாணுதல்" என்றதால் அவர் புற வழகையும் பெற வைத்துள்ளார். முருகனையே நோக்க விரும்பும் புலவன் மீண்டும் முருகனை நோக்குதலே முறையாகலின் அம் முருகனது கடப்ப மாலையணிந்த மார்பினை அறிவிக்கின்றார் அக் கடம்ப மாலை எக்காலத்து எவ்விடத்துப் பூத்தது என்பனவும் விளக்கப்படுகின்றன. கடலில் நீர் முகந்த மேகம் விண்ணில் பரவிப் பெய்த முதல் மழையிலேயே தண்ணிதாய காட்டில் தழைத்த கடப்ப மரத்தில் பூத்த பூவைக் கொண்டு செய்யப்பட்ட மாலையாம் அது இக் கடப்பமாலை போகத்திற் குரியதாகும். போகத்திற்குரிய மாலையாக மாமடிகளாகிய திருமாலுக்குரிய முல்லை நிலத்தில் பூத்த கடப்ப மாலையைக் கொள்வது எவ்வளவு பொருத்தமாக உள்ளது! மாலையை நோக்கிய பின்னர் மேல் நோக்கின் முருகன் சென்னி காணப்படும் அன்றோ? அச் சென்னியில் மிளிர்வது யாது? அதுதான முருகனுக்கு அடையாளப் பூவாகிய காந்தள் மலர்க்கண்ணி. குறிஞ்சி நிலத்தில் பூத்த தாய்ச் செந் நிறத்ததாய் ஆறு இதழ்களை யுடைய அக் காந்தள் மலர், குறிஞ்சிக் கிழவனாய்ச் செந் நிறமும் ஆறு முகமும் உடைய முருகனுக்கு அடையாளப் பூவாதல் பொருந்துவதே யாமன்றோ?

"சுருப்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள், பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன" என்று காந்தட் கண்ணி யணிந்த சென்னியை யறிவிக்கின்றார். இவ்வாறு அடிமுதல் முடிகாறும் முருகனுடைய எழிலை அறிவித்த புலவர், முருகனுடைய உறுப்பிற் சிறந்ததாயக கையில் விளங்கும் வேற் படையைப் பின்னர் அறிவிக்கின்றார் அவ்வேலால் செய்த வீரச் செயல்களையும் குறிப்பிட்டு அவ்வேலை யேந்திய செவ்வேற் சேயைப் புலவனுக்கு அறிமுகப் படுத்தி யிருக்கின்றார். காணவியலாத பொருளைக் கண்டு காட்டும் புலவர், ஓவியம் வரைந்து காட்டுவது போல முருகப் பெருமானுடைய ஒளி யுருவத்தை முன்னர் விளக்கிப் பின்னர்த் திருவடி திருக்கை திருமார்பு திருமுடி ஆகிய அவயவங்களையும் வேலினையும் இயறகை வழாது எடுத்துக் காட்டிச் செல்வது சால அழகிதாகக் காணப்படுகின்றது. இங்ஙனம முருகனுடைய திருவுருவத்தைக் கூறு முகத்தால் தாம் பின்னர் விரித்துக் கூற எண்ணிய அம் முருகப் பெருமானின் மூவகை யியல்புகளையும் குறிப்பில் பெற வைத்துள்ளார்.

முருகனுடைய எழிலைப் பொது வகையான் உணர்த்த வந்த புலவர், "வாணுதல் கணவன், தார்புரளு மார்பினன், கண்ணி மிலைந்த சென்னியன் ஆய செவ்வேற் சேய்" என்று குறிப்பிடுகின்றார். 'வாணுதல் கணவன்' என்றது சத்தியும் தானுமாய் இருக்கும் நிலையினைக் குறிப்பிட்டவாறு. "சர்வம் சத்திமயம் சகத்து" என்பவாகலின், சத்தியும் தானுமாய் இருக்கின்றான் எனவே உலகயோடு உடனாய நிற்கும நிலையினை யுணர்த்தியவாறு பிறது. "மார அத்துருள் பூந்தண்டார புரளுமார்பினன்" என உலக

போகத்திற்குரிய மாலை யணிந்த மார்பினைக் கூறியதால் உலகமே யுருவாய பெரு நிலையைக் குறிப்பிட்டவாறு.

> "மந்தியு மறியா மரம்பயி லடுக்கத்துச்
> சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
> பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்"

என்றதால் மனத்திற் கெட்டாத பர நிலையைக் குறிப்பான் உணர்த்தியவாறு. காந்தட் கண்ணி, சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள் எனப்படுவதும் அது உயர்ந்த மலையிலுள்ளது என்பதும் அம்மலை தானும் மந்தியும் அறியா மரம் பயின்றது என்பதும் அப்பர நிலையின் அருமையினை ஒப்புமையான் புலப்படுத்துவதாகும். மேலும் உருவத்தில் மேலிடத்திலிருக்கும் சென்னியைக் குறிப்பிட்டதால் மூவகை நிலையில் மேலதாகிய பர நிலையை நன்கு உணர்த்துதல் காண்க.

கணவன், மார்பினன், சென்னியன் என்ற முப்பெயர்களும் 'செவ் வேற் சேய்' எனப் பின்வரும் பெயர்க்கு அடையாய் அடுக்கி நின்றன வாதலின் இம் மூவகை நிலையினையும் உடையவன் செவ்வேற் சேயே என்பது பெற வைத்தவாறு. இப் பெயரும் '<u>செவ்</u>' எனவும் '<u>வேல்</u>' எனவும். '<u>சேய்</u>' எனவும் மூன்று சொற்களை யுடையதாய் அமைந்து அம் மூவகை நிலையினையும் குறிப்பினுள் குறிப்பாய்ப் பெற வைத்த நுட்பம் அறிந்து மகிழ்தற்குரியது.

இனிக் காந்தட் கண்ணியைக் கூறு முகத்தான் சூரர மகளிரையும் வேலைக் கூறு முகத்தான் பேய்ப் பெண்டினையும் இயைபு படுத்திக் கூறியிருக்கும் மாண்பு பெரு வியப்பைத் தருவதொன்றாகும். ஒன்றோடொன்று ஒவ்வாது முரண்பட்ட இரண்டு காட்சிகளை ஓரிடத்தில் ஒன்றன்பின் ஒன்றாக எடுத்துக் காட்டி மகிழ்விக்கின்றார். சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள் யாண்டுப் பூத்தது என்பதை அறிவிக்க வந்த புலவர், கோடுவாழ் குரங்கும் ஏறியறியாத உயர்ந்த மரங்கள் நெருங்கிய மலையின் சிறப்பை யறிவித்தார். அம் மலையும் சோலையால் சூழப்பட்டுளது; என்பதை விளக்கி அச்சோலை தானும் சூர் அரமகளிர் ஆடுஞ் சோலை என அறிவிக்கின்றார். அச்சூர் அர மகளிர் எவ்வியல்பினர்? அவர் பாடலும் ஆடலும் என்ன? என்பனவற்றை இம் முறையால் சங்கிலிபோல ஒன்றற் கொன்று இயைபுடையதாகச் சிறப்பித்திருக்கின்றார்.

## சூரர மகளிர்.

தெய்வ மங்கையர் தம்மழகால் கண்டார்க்கு அச்சம் விளைவித்தலின் "சூர் அர மகளிர்" எனப்பட்டார். சூர் - அச்சம். அர மகளிர் - தெய்வ மங்கையர். இவர்களுடைய எழிலை அடி முதல் முடிவரை ஓவியப் வரைந்து காட்டுவது போல் முறை முறையே தெரிவிக்கின்றார். முதலில் ஒண்செஞ்

சீறடியைக் காட்டுகின்றார். அடி சிறுத்திருப்பது பெண்டிர்க்கழகு. ஆதலின் 'சீறடி' என அரமகளிரின் அழகு மிகுதியை விளக்கினார். அவ்வடிகள் சிறியவாக இருப்பதோடு சிவந்து ஒளியுடையவாய்க் காணப்படுகின்றன. இயற்கை எழில் மிக்க அவ்வடிகளில் செயற்கை யழகும் பொலிய கிண்கிணி யணியப் பெற்றுள்ளன. அடிகளுக்கு மேலிருக்கும் கணைக்கால் திரண்டு அழகுடன் விளங்குகின்றன. இடை மென்மையால் நுடங்கி வளைந்து காணப்படுகின்றது. தோள்கள் திரண்டு மூங்கில்போல் வனப்புடையவாக விளங்குகின்றன. அவர்கள் உடுத்துக் கொண்டுள்ள ஆடை இந்திரகோபப் பூச்சியைப் போன்று சிவந்து பளபளப்புடன் காணப்படுகின்றது. இவ்வாடைக்கு இவ்வளவு அழகான சிவப்பு நிறம் செயற்கையால் ஊட்டப்பட்டதன்று. தெய்வத்தின் ஆணையால் இயற்கையாகவே சிவந்திருக்கின்றதாம். பூத்தொழில் கூடச் செய்யப் பெற்றுள்ளதாம். அவ்வாடைக்குள் அல்குல் புறத்தணிந்த பல மணிகளைக் கோத்த மணிமேகலை ஒலியும் ஒளியும் செய்து கொண்டிருக்கின்றன. ஓவியர் வல்லாரும் கையால் புனைந்து இயற்ற முடியாத அவ்வளவு அழகு அவர்கட்கு இயற்கையாகவே அமைந்துளது. மானிட மகளிர்க்குத் தாயர் பலரும் கைசெய்வதால் அன்றே அழகு உண்டாவது? இத் தெய்வ மங்கையர்க்கு அங்ஙனமின்றித் தெய்வத் தன்மையால் இயற்கையாகவே அமைந்துளது. இயற்கையான அழகினுக்கு அழகு செய்வார்போல் சாம்பூநதம் என்னும் உயர்ந்த பொன்னால் செய்யப்பட்ட அழகிய ஒளிவாய்ந்த ஆபரணங்களை அணிந்துள்ளார்கள். அது நெடுந் தொலைவிலும் சென்று விளங்குகின்றது.

அவர்கள் தலையில் அமைந்த கூந்தல் இடையொத்து நெய்ப்புத் தன்மையுடையதாகக் காணப்படுகின்றது. இங்ஙனம் இயற்கையாக அமைந்த அக்கூந்தலை அழகு செய்ய வந்த ஆய மகளிர், இக் கூந்தலே கூந்தல் பலவற்றுள்ளும் சிறந்தது என ஆய்ந்து முடிவு கட்டியிருக்கின்றார்கள். அவ்வளவு அழகான கூந்தலிலே அத் தெய்வ மகளிர் தம் செம் மேனிக்கும் செந்நிற ஆடைக்கும் ஏற்றதாகச் சிவந்த காம்பினையுடைய வெட்சியின் சிறிய பூக்களை விடு பூவாகத் தூவி, அதற்கு நடுவே பசுந் தண்டினையுடைய குவளையினது தூய இதழ்களைக் கிள்ளி யிடுகின்றார்கள். சீதேவி என்னும் தலைக் கோலத்தையும் வலம்புரி வடிவாகச் செய்த தலைக் கோலத்தையும் வைத்தற்குரிய இடத்தே வைக்கின்றார்கள். திலகம் இட்ட நறுமணம் வீசும் நெற்றியில் தாழுமாறு சுறா மீனின் வாயாகச் செய்த தலைக் கோலத்தைத் தொங்கச் செய்கின்றார்கள். வேண்டிய மணப் பொருள்களைக் கூட்டி முற்ற முடித்த குற்றமற்ற கொண்டையில் பெரிய குளிர்ந்த சண்பகப் பூவைச் செருகுகின்றார்கள். அதன்மேல் கரிய புறவிதழையும் துய்யினையுமுடைய மருதம்பூங் கொத்துகளை இடுகின்றார்கள். அந்த உச்சிக் கொண்டையின்மேல் பச்சென்ற அரும்புகளினின்றும் மேலே வந்து அழகு பெற்றுத் தோன்றுகின்ற நீர்க்கீழ்

நின்ற சிவந்த அரும்புகளைக் கொண்டு இணையாகக் கட்டிய மாலையை வளைய வைத்துக் கொள்கின்றார்கள். வளம் வாய்ந்த இரு காதிலும் ஒத்த அளவினவாகத் தொங்கவிட்ட அசோகத்தினது ஒளிவாய்ந்த தளிர்கள் நுட்பமான வேலைப்பாடமைந்த அணிகள நிறைந்த மார்பில் வந்து அசைகின்றன. திண்ணிய வயிரமான நறுமணமிக்க சந்தனக் கட்டையைத் தேய்த்து உண்டாக்கிய பொலிவு வாய்ந்த நிறத்தினையுடைய சந்தனக் குழம்பைக் கோங்கு அரும்பு போன்று குவிந்துள்ள இளங் கொங்கைகளில் அப்பிக் கொள்கின்றார்கள். அக்குழம்பு மணங் கமழ்கின்ற மருதம்பூவை அப்பினாற் போலக் காணப்படுகின்றது. அக்குழம்பின் ஈரம் புலர்வதற்கு முன் விரிந்த வேங்கைப் பூவினது நுண்ணிய மகரந்தப் பொடியை அதற்குமேல் அப்பிக் கொள்கிறார்கள். இங்ஙனமெல்லாம் தம்மை அலங்கரித்துக் கொண்டமையால் பெற்ற பேரழகைப் பிறரெல்லாம் காணுமாறு விளையாடத் தொடங்குகின்றார்கள். அவ்விளையாட்டு எத்தகையது என்னின்? விளாமரத்தின் சிறிய தளிரைக் கிள்ளி ஒருவர் மேல் ஒருவர் படுமாறு அதனைத் தெறிப்பதுதான். திண்மையான பந்து முதலியவற்றை ஒருவர் மேலெறிந்தால் அது தப்பாமல் அங்ஙனமே படுவது எளிது. மெல்லியதாய இவ்விளாவின் இளந்தளிர் விரலால் தெறித்தால் தப்பாமல் பிறர்மேல் படுவதென்பது அரிதேயாம். பிறர் மேல் பட்டுழியும் ஒரு சிறிதும் துன்புறுத்தாது இன்புறுத்தும். இவ்வரிய விளையாட்டையே அத் தெய்வ மகளிர் தேர்ந்து கொண்டார்கள்.

அவர்கள் அவ்வாறு தெறித்த அவ்விளந்தளிர் தாம் நினைந்தாங்குப் பிறர் மேல் பட்டவுடன் "முருகனுடைய கோழி யோங்கிய வெற்றிக் கொடி நெடிது வாழ்வதாக" என அத்தெய்வ மகளிர் பலரும் ஒருங்கே கூடிக் கொண்டு சிறப்புடன் விளங்கும் மலைப்பக்கம் எல்லாம் எதிரொலி எழுமாறு பாடிக் கொண்டு மகிழ்ச்சியால் சோலையில் ஆடுகின்றார்கள். அத் தெய்வ மகளிர் ஆடுதற்கிடமான சோலையால் சூழப்பட்டுளது மலை; அதன் கண் மந்தியும் ஏறியறியாத அவ்வளவு உயர்ந்த மரங்கள் அடர்ந்திருக்கின்றன. அத்தகைய மலையில் காந்தள் பூத்திருக்கின்றது. அக் காந்தள் முருகனுக்கு உரிமை பூணும் தெய்வத் தன்மையுடைமையால் அதில் வண்டுகள் மொய்ப்பதே யில்லை. அத்தகைய காந்தள் மலர் கொண்டு கட்டிய பெரிய தண்ணிய கண்ணியைச் சூடிய சென்னியனாக விளங்குகின்றான் முருகன் எனச் சிறப்பிக்கின்றார் புலவர்.

காந்தட் கண்ணியைக் கூறு முகத்தால் புலவர் புலவனுக்குக் காட்டிய இந்த முதற் காட்சியில் அழகிற்கே எல்லையாக விளங்கும் ஒளியுருவங்களைக் காண்கின்றோம். அன்பின் அகலத்தைக் காண்கிறோம். அத்தெய்வ மகளிர் விரும்புவதும் அணிவதும் எல்லாம் உயர்ந்த நறுமணப் பொருள்களே. அம்மணப் பொருள்களையும் முருகனால் கொடுக்கப்பட்ட மேனி முருகினை விளக்குவதற்காகவே விரும்புகின்றார்கள். தனித்து இன்புறாமல் பலர்

திரண்டு ஆடிப்பாடி இன்புறுகின்றார்கள். இதனால் பல்லாரோடும் பகையின்றிப் பயிலும் அன்பின் உயர்வை யுடையவர்கள் என்பது விளங்கும். விளவின் தளிர்களைக் கிள்ளித் தெறித்த காலத்தில் தெறிக்கப்பட்டவர்கள் தப்பி ஓட முடியாமையால் தோற்றவர்களே யாயினும் வென்றவர்கள் மகிழ்ந்தாடும் முருகாட்டத்தில் மகிழ்ச்சியுடன் கலந்து கொள்கின்றார்கள். இதனால் அவர் தம் பகையற்ற நகை யுள்ளத்தின் தகையினைக் காணலாம். தாம் எறிந்த விளவின் தளிர் பிறர்மேல் தப்பாமல் பட்டது தம் செயலே யாயினும் தம் செயலென்று தருக்கி மகிழாமல் அவனன்றி ஓரணுவும் அசையாது ஆதலின் அம் முருகனுடைய அருளே உள் நின்று ஊக்கமளித்தது, என்று எண்ணி அவனுடைய வெற்றிக் கொடியை வாழ்த்திப் பாடுகின்றார்கள். அக்கொடியே முன்பு தம் கணவர்க்கும் தமக்கும் வாழ்வளித்தது என்பதை நன்குணர்ந்தவர்களல்லரோ? தம் செயல் என்பதொன்று இன்றி எல்லாம் இறைவன் செயலே என்று கொள்ளும் கோள்கை யுடையாரே இறைவன் இன்னருளைப் பெறுதற்குரியராவர். "நஞ்செயலற்றிந்த நாமற்றபின் நாதன் தன்செயல் தானே என்றும் தீபற, தன்னையே தந்தானென்றுந் தீபற" என்னும் அநுபவ ஞானியின் வாக்கும் காண்க. விளையாட்டாகத் தெறித்த விளவின் தழை, பிறர்மேல் பட்ட செயலையே முருகன் செயல் என்று எண்ணும் இச் சூர மகளிர், தாம் செய்யும் எச்செயலையும் தம் செயலாக எண்ணாமல் அம் முருகன் செயலாகவே எண்ணுவர் என்பது தேற்றம். எனவே அவர்கள் தம் செயலற்றுத் தாம் எனும் தருக்கற்று விளங்கிய தூய ஞானமுடையவர்களே என்பது நன்கு விளங்கும். இவர்களுடைய இவ்வுயர்வு கருதியே புலவரும் இவர்கள் உறுப்புக்களை கூறும் வழிப் பாதாதி கேசமாக முறைப்படுத்தி யிருக்கின்றார் என்பதும் நோக்கி யுணர்க. முதலில் இவர்கள் திருவடிகளைக் காண்பவர்களும் உயர் நலம் எய்தலாம் என்பது அவர் கருத்து. மண மிக்க காந்தளங் கண்ணி, மணப் பொருளில் விருப்பமிக்கவரும் முருகன்பால் ஆயாத அன்புடையவரும் ஆகிய சூர மகளிர் சார்புடையதாகக் கூறியது சாலப் பொருத்தமுடையதாகும். இச் சூர மகளிர் வருணனையால், உயர்ந்தவர்கள் முருகன் திருவருளைப் பெற்று வழிபடுந் தன்மையை உணர்த்தினார். மனிதரினும் அரமகளிர் உயர்ந்தோராதல் காண்க.

## பேய் மகள்.

இனி இச் சூர மகளிரோடு முற்றிலும் முரண்பட்ட பேய்மகள் காட்சியை உணர்த்துகின்றார். புலவர் கூறக் கருதியது வேற்படையே யாயினும் புலால் நாறும் அவ்வேற்படைக்கும் புலால் விரும்பும் பேய் மகட்கும் தொடர்பிருத்தலின் உடன் விளக்குகின்றார். "பூமியைச் சூழ்ந்த தண்ணிய கடல் நிலை குலையும்படி உள் புகுந்து அவுணர்களுடைய நல்வலம் அடங்குமாறு கீழ் நோக்கிக் கவிழ்ந்தலர்ந்த பூங்கொத்துகளை யுடைய மாமரத்தை வெட்டின வேலால் குதிரை முகமும் மனிதயாக்கையும் ஆய இருவகையான உருவினை

யுடைய ஒரு பெரிய சூரபன்மாவின் உடம்பு அற்று வேறு வேறு ஆம்படி அச்சம் உண்டாக நெருங்கி அவ்வவுணர் தலைவனைக் கொன்ற குற்றமற்ற வெற்றியினையும் ஒருவராலும் அளந்தறிய வியலாத நல்ல புகழினையும் உடைய செவ்வேற் சேய்" என முருகனது பகையழிக்கும் ஆற்றலை வேலோடு சேர்த்துப் புகழ்கின்றார் புலவர். வேலால் சூரபன்மாவைக் கொன்ற காலத்துப் பேய் மகள் பிணங்களின் நிணமுண்டு செருக்கிப் பாடி யாடி மகிழ்கின்றாள். அவள் உறுப்புக்களைக் கேசாதி பாதமாகப் புகன்று செல்லுகின்றார் புலவர். அப் பேய்மகள் கூந்தல், எண்ணெய் பூசப்படாமையால் உலர்ந்து பறந்து கொண்டு கிடக்கின்றது. அவள் வாய், அங்காந்தபடி யிருக்கின்றது. அதில் பற்கள் நிரல்படவின்றிக் கொட்டியும் மேழியும் கோத்து வைத்தாற் போன்று காணப்படுகின்றன. அவள், கோபத்தால் சுழலும் கருவிழிகளையுடைய பசிய கண்ணால் அச்சமுண்டாகப் பார்க்கின்றாள். அவள் காதுகளில் உள்ள பிதுங்கிய கண்ணையுடைய கோட்டானும் பாம்பும் மார்பில் வந்து தொங்குவதால் அவள் பெரிய கொங்கைகளில் தாக்கி வருத்துகின்றன. அவள் உடம்பு வழுவழுப்பு என்பதே யின்றிச் சருச்சரை யுடையதாகக் காணப்படுகின்றது. அவள் நடையோ கண்டவர்கள் அஞ்சுமாறு கடுமை யாக இருக்கின்றது. இவ்வாறு எல்லாவற்றாலும் கண்டார் அஞ்சத்தக்க அப்பேய் மகள், முருகன் வெற்றி கொண்ட போர்க்களத்தில் முடைநாற்ற முடைய கரிய தலையைக் கையில் ஏந்திக் கொண்டு குருதி தோய்ந்த கூரிய நகங்களையுடைய வளைந்த விரலாலே அத் தலையிலுள்ள கண்களைத் தோண்டி யுண்கின்றாள். அசுரர்க்கு அச்சம் உண்டாகுமாறு முருகன் வெற்றி கொண்ட போர்க்களத்தைப் பாடிய வண்ணம் தோளை அசைத்துக் கொண்டு நிணத்தைக் தின்று கொண்டே துணங்கைக் கூத்து ஆடுகின்றாள். பேய் மகள் இங்ஙனம் துணங்கை யாடுமாறு சூரபன்மாவைக் கொன்ற செவ்வேற் சேய் என்று இயைபு படுத்துகின்றார் புலவர்.

இப் பேய்மகள் உருவம், அருவருக்கத்தக்க உருவம், அஞ்சத்தக்க உருவம்; அவள் விரும்புவது புலால் நாற்றத்தையே; அவள் பாடுவதும் புலால் கமழும் போர்க்களத்தையே யாம். இப் பேய்மகள் காட்சியோடு சூரமகளிர் காட்சியை யொப்பிட்டுப் பார்த்தால் இரவுக்கும் பகலுக்கும் உள்ள வேறுபாடு காணப்படும். அரமகளிர் அழகிற்கு எல்லையாக விளங்குகின்றனர். இப் பேய்மகள் கோர உருவிற்கு எல்லையாக விளங்குகின்றாள். அவர்களைக் காண மகிழ்ச்சி பொங்கும்; இவளைக் காண அச்சம் விஞ்சும். அரமகளிர் காதில் அணிந்தது நறிய அசோகந்தளிர்; பேய்மகள் காதிலணிந்தவை புலால் வீசும் கோட்டானும் பாம்புமே யாம். அரமகளிர் பலராகத் திரண்டு விளையாடி மகிழ்கின்றார்கள்; பேய்மகள் தனித்துப் புலால் உணவால் வயிறு நிரப்பி மகிழ்கின்றாள். அரமகளிர், தாம் தெறித்த தளிர் பிறர் மேற்படச் செய்வது தம் செயலே யாயினும் அது முருகன் அருளால்

ஆயிற்றெனு அவன் கோழிக் கொடியை வாழ்த்துகின்றார்கள்; இப் பேய் மகள், தன் முயற்சி யேதுமின்றி முருகன் தன் வேல் கொண்டு கொன்று குவித்த பிணத்தைத் தின்னும் போதும் அவ்வேலையோ முருகனையோ வாழ்த்தாது பிணம் கிடந்த களத்தையே பாடுகின்றாள்; மகிழ்ச்சியால் ஆடுகின்றாள். இக்காட்சி இரண்டானும் புலவர் அறிவிப்பது யாது? என்பதை நோக்குவோம்.

இறைவன் எல்லா உயிர்கட்கும் உள்ளீடாய் நின்று எச்செயலையும் செய்விக்கின்றான் என்றுணர்ந்து வழிபடும் நல்லறிவுடையோர்க்கும்; இறைவன் நினைவே யின்றி வயிறு நிரப்புவதையே பெரு நோக்கெனக் கொள்ளும் புல்லறிவுடையோர்க்கும் ஒப்பவே அருள் செய்கின்றான் என்ற உயர் கருத்தையே சூரமகளிர் இயல்பாலும் பேய்மகள் இயல்பாலும் அறிவித்துள்ளார். இறைவன் அருள் செய்வதில் வேற்றுமை இன்மையும் அவன் அருளுதவியைப் பெறும் ஆன்மாக்களிடையே வேற்றுமை மிகவுண்மையும் காட்டியவாறு. தரை நம்மைத் தாங்குகின்றது, என்னும் உணர்ச்சி யுடையோரையும் தரையின் உதவி யறியாது தாமே திரிவதாக எண்ணும் புல்லரையும் வேறுபடுத்தாது தாங்கும் தரைபோல, இறைவன், தன்னுதவியை யறிந்து வழிபடுவோர்க்கும் அறியாது செருக்குவோர்க்கும் ஒப்பவே அருள் செய்கின்றான். அவனருள் உதவியை யறிந்து வழிபடுவோர் உயர்ந்தோராதலும் அவனுதவியை யறியாது கண்டதே காட்சியெனக் கருதுவோர் தாழ்ந்தோராதலும் கண்கூடு.

அரமகளிர் உயர்ந்தோங்கிய கோழிக் கொடியை வாழ்த்தலும், பேய்மகள் தான் கண்ட தாழ்ந்து கிடக்கும் புலால் வீசும் போர்க்களத்தைப் பாடுதலும் அவரவர் பெருமை சிறுமைகளை யுணர்த்துதல் காண்க. வேண்டுவார் வேண்டுவனவே ஈவது இறைவன் இயல்பாகலின் சூரமகளிர் விரும்பிய விளையாட்டு வென்றியையும் பேய்மகள் விரும்பிய புலாலுணவையும் கொடுத்தருளி, இருதிறத்தாரையும் நிறைவுபடுத்துகின்றான். விருப்பம் உயிர்களுக்குள்ள உரிமையே யன்றி இறைவன் உரிமை யன்று. விரும்புவதற்குரியன உயிர்கள். கொடுப்பவன் இறைவன். உயர்வுந் தாழ்வும் விருப்பத்திற் கேற்றவாறு பொருந்தியுளது. சூரமகளிர் விருப்பம் உயர்ந்த உயிர் உணர்ச்சியாகிய வெற்றியிலும், பேய்மகள் விருப்பம் தாழ்ந்த உடலுணர்ச்சியாகிய பசி நீங்குதலிலும் இருப்பதை யோர்க. அரமகளிர் உயர்ந்தோராதலும் பேய்மகள் இழிந்த பிறப்பினளாதலும் வெளிப்படை. உலகில் உயர்ந்தோர்க்கும் இழிந்தோர்க்கும் எடுத்துக் காட்டாகவே அரமகளிரையும் பேய்மகளையும் கூறினர். அரமகளிர் தொழுதற்குரிய பெருமையுடையர் என்பதை யறிவிக்க அவர்கள் உறுப்புக்களைப் பாதாதி கேசமாகக் கூறியிருத்தலும், பேய்மகள் அதற்குரியவல்லள் என்பதை யறிவிக்க அவளுறுப்பைக் கேசாதி பாதமாகக் கூறியிருத்தலும் காண்க. பேய் மகளடியை விளங்கக் கூறாது "உருகெழு செலவு"

என்று தொழிலான் உணருமாறு கூறி யொழிந்தமையும் " கிண்கிணி கவைஇய ஒள் செங் சீறடி " எனச் சூரர மகளர் அடியைச் சிறப்பித்தமையும் காண்க.

வீடுபெற விழையும் புலவன் செல்லும் வழியில் அரமகளிர் போன்ற உயர்ந்தோரையும் பேய் மகள் போன்ற இழிந்தோரையும் காண்டல் கூடும். காணின் அவ்விரு திறத்தார்க்கும் ஒப்ப அருள் செய்யும் முருகப் பெருமானதருள் பெருமையை நோக்குவதல்லது உயிர்களின் பெருமை சிறுமைகளைப் புகழ்ந்தும் இகழ்ந்தும் காலம் கடத்தல் ஆகாது என்பதற்காகவே சூரர மகளிரையும் பேய் மகளையும் தனிச் சிறப்பால் கூறாது முருகன் கண்ணிக்கும் வேலிற்கும் அடையாகப் புணர்த்திக் கூறியுள்ளார் என்பதை நுனித்துணர்க.

முருகனுடைய இயல்பை இங்ஙனம் பொது வகையால் கூறிய சீவன் முத்தராம் பெரும் புலவர், சிறப்பு வகையால் அவன் நிலைகளைக் கூறுமுன் அவனருளைப் பெறுவது உறுதி என்பதை உணர்த்த வேண்டுவது இன்றியமையாததாகும். ஆகவே அதனை முன்னர் அறிவிக்கின்றார் " செவ்வேற் சேயினுடைய சேவடியில் சேர்தற்குரிய தலைமையான உள்ளத்தோடும் நல்வினைகளைச் செய்யும் கொள்கையோடும் இந்திரியங்களைக் கடந்து தங்குகின்ற வழியை நீ விரும்பினையாயின் வீடு பெறுவோர்க்கு உரியனவாகக் கூறும் நற்குணங்கள் பலவும் சேர்தலால் நல்லதாகிய மனத்திலுண்டாய இனிய வீடுபேற்று விருப்பத்தை முன்பு நீ செய்த நல்வினையால் தப்பாமல் இப்பொழுதே பெறுவாய் " என்று அறிவித்தார்

இங்ஙனம் கூறக் கேட்ட வீடு விரும்பின புலவன், அப் பரமன் யாண்டு யாண்டு உளன் ; அவன் இயல்புகள் என்னை? அவனை வழிபடு முறையாது? என வினவ அவாவுதல் இயல்பாதலின் அம் முருகன் இனிதுறையும் இடங்களையும் இடங்களோடு சேர்த்து அவன் நிலைகளையும் வழிபடு மடியவர் வழிபடும் முறையினையும் உணர்த்தத் தொடங்கி முதற்கண் திருப்பரங் குன்றத்து முருகன் உலகத்திற்கு வேறாய் நிற்கும் பர நிலையை அறிவிக்கின்றார்.

## திருப்பரங்குன்றம்.

திருப்பரங் குன்றத்தைத் தெரிவிக்க வந்த புலவர், தூங்கச் செந் தமிழ்ச் சங்கம் நிலை பெற்றிருந்த சிறப்பாலும் ஈண்டிய புகழுடைப் பாண்டியன் ஆண்டிருந் தாண்டுவரும் பெருமையாலும் எல்லோராலும் நன்கறியப்படுவது மாடமலிந்த மதுரையே யாதலின் அதனை முற் கூறி அதன் மேற்றிசையில் உள்ளது திருப்பரங் குன்றம் என்று கூறியுள்ளார். மதுரைமா நகரில் பாண்டியன், போரை விரும்பிச் செய்து வெற்றி பெற்று எடுத்துக் கட்டிய வானமளாவி யுயர்ந்து காணப்படும் நீண்ட கொடிகள் கோபுர வாயிலில் அசைந்தாடிக் கொண்டிருக்கின்றன. இன்னும் சிறிது அணுகி நோக்கினால் வரிந்து புனைந்த பந்தும் பாவையும் அவ்வாயிலில் தொங்கிக் கொண்டிருக்கின்றன,

கொடிகள் கட்டுவது வெற்றிக்கு அறிகுறி என்பர். இப் பந்தும் பாவையும்
தொங்க விட்டிருப்பது எதற்கு என்பதைக் காண்போர் உய்த்துணர வேண்டி
யுளது. பாண்டியன், எதிர்த்துவரும் மன்னர்களை மடவார்போல வலியில
ராகக் கருதுகின்றமை தோன்ற அவர்கள் விளையாடவெனப் பந்தும் பாவை
யும் தொங்க விட்டிருக்கின்றார்கள். பந்தும் பாவையும் கொண்டு ஆடுதல்
மடவார் செயல். இப் பந்தையும் பாவையையும் கண்டவுடன் பாண்டியன்
வலிமையை யுணர்ந்து போர் செய்ய வருவோர் இலராயினர். எனவே அவ்
வாயில் போரில்லாத அமைதி மிக்க வாயிலாக விளங்குகின்றது. அவ் வாயி
லின் உள் நுழைந்து பார்த்தால் கடைத்தெரு காணப்படுகின்றது. அதன்
செல்வ நிலையை நோக்குவார்க்குச் செல்வத்திற்குரிய திருமகளே அங்கு
வந்து வீற்றிருக்கின்றாள் என்று தான் தோன்றும். அங்கு நிகழும் வணிக
முறையில் கொடுப்பதைக் குறைத்துக் கொள்வதை மிகுதியாக்கும் தீய முறை
கையாளப்படவில்லை. பிறர் பொருளையுந் தம் பொருள் போல் பேணும் நடுவு
நின்ற நன்னெஞ்சினோராக வணிகர் வாணிகஞ் செய்கின்றனர். இத்தகைய
கடைத் தெருவைக் கடந்து சென்றால் மாடங்கள் நிறைந்த பெரிய தெருக்
கள் காட்சியளிக்கின்றன. இவற்றையெல்லாங் காணுங்கால் அங்கு வாழும்
மக்கள் வீரமிக்க செங்கோல் மன்னனாகிய பாண்டியனால் பகையின்றி அமை
தியாக வாழ்க்கை நடாத்துகின்றனர் என்பதும் வேண்டிய பொருள்கள்
ஈண்டப் பெற்றுப் பசியின்றி வாழ்கின்றார் என்பதும் விளங்குகின்றன.

இத்தகைய பெருமை வாய்ந்த மதுரைக்கு மேற்றிசையில் விளங்குகின்
றது திருப்பரங்குன்றம். அக் குன்றத்தின் அருகே கரிய சேற்றினையுடைய
அகலமான வயல்கள் காணப்படுகின்றன. அவ் வயலில் முள் நெருங்கிய
தண்டினையுடைய வாய் விரிந்து மலர்ந்த தாமரை மலர்கள் காட்சியளிக்கின்
றன. அம் மலரில் வண்டுகள் மாலைக் காலத்துத் தங்குகின்றன. இரவு வந்த
வுடன் அத் தாமரை மலர்கள் குவிந்து விடுகின்றன. வண்டுகள் வெளிவர
வியலாது அம் மலரினுள் உறங்கி விடுகின்றன. சிறந்த ஒளியுடைய
வைகறைக் காலம் வருகின்றது. குவிந்த மலர் சிறிது விரிகின்றது. உறங்கிய
வண்டுகள் விழித்து வழி காண்கின்றன. பறக்கின்றன. அண்மையில் தேன்
பொருந்திய நெய்தல் மலர்களைக் காண்கின்றன. குவியும் நிலையிலுள்ள அம்
மலரில் ஊதித் தேனருந்துகின்றன. ஆனால் தமக்கு வேண்டிய அளவு தேன்
கிடைக்கப் பெறவில்லை. அந் நிலையில் பகலவன் தோன்றிவிடுகின்றான்.
எங்கும் ஒளி மயமாக விளங்குகின்றது. தேனருந்திய வண்டுகள் உயரப்
பறக்கின்றன. திருப்பரங் குன்றத்தின் உச்சிக்குச் செல்கின்றன. அங்கு
அழகிய சுனை காணப்படுகின்றது. அதில் கண்போல் மலர்ந்த அழகிய மலர்
கள் காணப்படுகின்றன. அம் மலர்களில் தங்கி இன்ப மகிழ்ச்சியால் அகஞ்
சிறையையுடைய அவ் வண்டுகள் ஆரவாரிக்கின்றன. அந்த ஆரவாரத்திற்கு
இடமாக விளங்குகின்றது பரங்குன்று. அப் பரங்குன்றத்தில் முருகப் பெரு
மான் மனம் விரும்பித் தங்குதற்குரியன் என்று உணர்த்தினர் பெரும் புலவர்.

திருப்பரங்குன்றத்திற்கு அடையாக வண்டுகளின் செயல்களையே கூறி யுள்ளார். வண்டுகள் வயல் தாமரையில் இரவில் உறங்குகின்றன. வைகறை யில் விழித்து நெய்தல் மலரில் உள்ள குறைபடு தேனை விரும்பிப் பருகுகின்றன. விடிந்த பின் உயரப் பறந்து சென்று சுனை மலரில் தங்கி ஆரவாரிக்கின்றன. உறங்கின; நுகர்ந்தன; ஆர்த்தன என்று சுருக்கமாகக் கூறலாம். திருப்பரங் குன்றத்திற்கு—முருகப் பெருமான் விரும்பித் தங்கும் பரங்குன்றத்திற்கு இவ் வண்டுகளின் செயலைக் கொண்டு புலவர் உணர்த்தக் கருதிய சிறந்த பொருள் வேறு உண்டு என்பது இப் பகுதியை நோக்குவோர்க்கு விளங்கும்.

முன்னரே தோற்றுவாய் செய்துள்ளபடி இறைவனுடைய மூவகை யியல்புகளில் உலகத் தொடர்பின்றித் தனித்து நிற்கும் பரநிலை யுடையனாக முருகன் திருப்பரங் குன்றத்தில் வீற்றிருக்கும் தன்மையை யுணர்த்துவதே புலவர் உட்கோளாதலின் அதற்கேற்பவே இவ் வடைகளைக் கூறியிருக்கின்றார். பின்வரும் திருச்சீரலைவாயில் அறுமுகமும் பன்னிருகையும் உடைய முருகன் உருவத்தைக் கூறும் புலவர், இங்கு முருகன் உருவ நிலையைப்பற்றி யாதும் கூறாது "அமர்ந்துறைதலு முரியன்" என்றே கூறி யிருத்தல் காண்க. இதனால் தத்துவங் கடந்து நிற்கும் அருவ நிலையாகிய பரநிலையை யுணர்த்தினார் என்பது பெறப்படும். "அலைவாய்ச் சேறலும், ஆவினன்குடி யசைதலும் உரியன்" என்று கூறுபவர், இங்குக் "குன்றமர்ந் துறைதலு முரியன்" என 'அமர்ந்து' என்னும் அடையைச் சிறப்பாகப் புணர்த்தி யுள்ளார். அமர்தல்—விருப்புதல். இதனால் ஏனைய விடங்களினும் திருப் பரங்குன்றத்தில் அவன் விரும்பித் தங்குதற்கேற்ற சிறப்பு அமைந்திருத்தல் வேண்டும் என்பது புலப்படும். அச் சிறப்பு தானும் தன் சிறப்பியல்பாகிய தத்துவங் கடந்த பர நிலைக்குத் தக்கவாறு அமைந்திருத்தல் வேண்டும். அத் தகைய சிறப்புத் திருப்பரங் குன்றத்திற்குப் புணர்த்திய அடையால் புலப்படுகின்றதா? என்பதை நோக்குவோம்.

ஆன்மாக்களுக்குக் கேவல நிலை, சகல நிலை, சுத்த நிலை என மூன்று நிலையுண்டு என்பது சைவ சித்தாந்த சாத்திரத்தில் கண்டது. 'கேவல நிலை' என்பது ஆன்மா மலங்களோடு மாயையில் ஒடுங்கி அறிவின்றிக் கிடக்கும் நிலை. 'சகல நிலை' என்பது, அவ்வான்மாக்களிடத்து வைத்த கருணையால் இறைவன் தனுகரண புவன போகங்களை யுண்டாக்கித்தர அவற்றைப் பெற்று அவ்வான்மாக்கள் சிறிது அறிவு தெளிந்து உலக போகங்களை நுகர்ந்து பிறந் திறந்துழலும் நிலை. 'சுத்த நிலை' என்பது, சகலத்தில் பெற்ற சிற்றறிவைப் பெருக்கித் தம்மையும் தம்முடைய தலைவனையு முணர்ந்து மலமாசு கழிந்து பேரறிவுப் பொருளாகிய இறைவன் திருவடிகளில் இரண்டறக் கலந்து இன்புறும் நிலை. திருப்பரங் குன்றத்திற்கு அடையாகப் புணர்த்த 'வண்டின ரிக்கணம்' என்றது, ஆன்மாக்களை யுணர்த்தியதாகவும், "அவ்வண்டுகள்,

கரிய சேற்றில் வளர்ந்த தாமரை மலரில் இரவெல்லாம் உறங்கிக் கிடந்தன" என்றது, அவ்வான்மாக்கள் இருட்கேவல நிலையில் மாயையில் அறிவு விளக்க மின்றி ஒடுங்கிக் கிடந்த நிலையினை யுணர்த்தியதாகவும் கொள்ள வேண்டும். இது கேவல நிலை. வைகறைக் காலம் என்பது ஞாயிற்றொளி சிறிது விளங்குங் காலத்தையே யாகும். வைகறைக் காலத்து வண்டுகள் நெய்தல் மலருக்குச் செல்ல வேண்டுமாயின் இரவெல்லாம் வண்டுகளை யுளளடக்கி மூடி யிருந்த தாமரை மலர் சிறிதேனும் விரிதல் வேண்டும். இல்லையேல் வண்டுகள் தாமரையிலிருந்து புறம் போதல் இயலாது. தாமரையைச் சிறிதலர்த்திச் சிறிது ஒளியுண்டாக்குவது வைகறையில் புலப்பட்டுத் தோன்றுத ஞாயிற்றின் செயலாகும்.

ஞாயிறு வைகறையில் தம் கதிர்களைச் சிறிதே தோற்றி இருளைச் சிறிது நீக்கித் தாமரையைச் சிறிதலர்த்தி வண்டுகளுக்கு விடுதலை தந்து கட்கமழ் நெய்தலையுங் காட்டியது. இந் நிகழ்ச்சி, இறைவன், தன் கருணையால் இருட் கேவல நிலையில் அறிவு மயங்கிக் கிடந்த ஆன்மாக்களை மாயையினின்றும் நீக்கி உடம்பு முதலியவற்றை அவ்வான்மாக்களுக்குக் கொடுத்துச் சிறிது அறிவு விளங்கச் செய்தான் என்பதைப் புலப்படுத்தும். "கட்கமழ் நெய்தல் ஊதி" என்றது, வைகறையில் வண்டுகள் நெய்தல் மலரில் இருந்த தேனை நுகர்ந்தது போல ஆன்மாக்கள், இறைவன் தந்த உடம்பொடு தோன்றி அவன் காட்டிய போகத்தைத் துய்த்துக் கொண்டு உழன்றமையை யுணர்த்தும். இது, இருட் கேவல நிலையினீங்கிய ஆன்மாக்களின் சகல நிலை ஆகும்.

"எறுபடக், கண்போல மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்கும்"

என்றது, "ஞாயிறு தோன்றப் பகற்காலம் உண்டாகி எங்கும் விளக்க மடைய நிலப் பரப்பிலுள்ள நீரில் மலர்ந்த நெய்தல் மலரில் உள்ள தேனை யுண்ட வண்டுகள், உயரப் பறந்து போய் மலை யுச்சியிலுள்ள சுனை மலர்களில் தங்கி ஆரவாரித்தது" என்னும் பொருளது. நெய்தல் மலரிலிருந்த தேனை வண்டுகள் உண்டு முடிந்தவுடன் ஞாயிறு தோன்றியது போல ஆன்மாக்கள், இருவினைப் பயனாகிய போக நுகர்ந்து முடிந்தவுடன் இறைவன் தோன்றி மேல் நெறியெலாம் புலப்படுத்தியதாகவும், "தரைப் பரப்பிலிருந்து தினைத்தனை யுளளதோர் பூவினில் தேனை யுண்டு கொண்டிராமல் வண்டுகள், மலை யுச்சிக்குச் சென்று சுனை மலரில் தங்கி ஆரவாரித்தது;" என்றது, சகல நிலையிலிருந்து போகம் நுகர்ந்து முடித்த ஆன்மாக்கள், இறைவன் புலப்படுத்திய நெறியே சுத்த நிலையை யடைந்து நினைத்தொறும் காண்டொறும் பேசுந் தோறும் எப்போதும் ஆனந்தத் தேன் சொரியும் செம்பொருளோடு இரண்டறக் கலந்து இன்புறும் நிலையாகவும் கொள்க. இது சுத்த நிலை.

இங்ஙனம் இருட் கேவலத்திருந்த ஆன்மாக்கள் இறையருள் உதவியால் சகல நிலையை யடைந்து பின் அச் சகல நிலையில் நீங்கிச் சுத்த நிலையை

யடைந்து மகிழ்கின்றன. இத்தகைய சுத்தான்மாக்கள் சூழத் திருப்பரங்குன்றத்தில் முருகன் உயர்ந்த தன் பரநிலையில் விளங்குகின்றான். என்பதை விளக்கியவாறு. சகல ஆன்மாக்கள் நிறைந்த உலகத்தைக் கடந்து விளங்குகின்ற இறைவன், சுத்த ஆன்மாககளோடு இருப்பதற்கு விருப்புதல் இயற்கையே யாதலின் ‘ அமர்ந்துறைதலும் உரியன் ’ எனச் சிறப்பித்தார் என்க.

அகப் பாட்டுக்களில் தலைவன் இயல்புகளைத் தோழியும் தலைவியும் வெளிப்படக் கூறாது அவன் நாட்டுக் கருப்பொருள்களைக் கூறி அவற்றின் மூலம் வெளிப்பட வைப்பது மரபு. இதற்கு ‘ உள்ளுறை யுவமம் ’ என்று பெயர். கடவுள் வாழ்த்துக் கூறும் இம் ‘ முருகாற்றுப் படை ’ புறம் எனப்படும், புறப் பாட்டுக்களில் இவ்வாறு உவமையைக் கூறி உவமேயத்தைக் கூறாது விடுத்தால் ‘ ஒட்டணி ’ என்பர். கருத்துடை யடை கொளி யணி என்றுங் கொள்ளலாம். புலவர், தாம் உரைத்த இத்தகைய நுண்பொருளை யுணரும் ஆற்றல் உள்ளவனே தாம் சொன்னெறியே சென்று செந்நெறி சேர்வான் என்பது கருதியே வெளிப்படக் கூறாது மறைத்துக் கூறினாராதல் வேண்டும். இறைவனுடைய மூவகை யியல்புகளில் முதன்மையதாய தானே யாம் பரநிலையை முதற்கண் உணர்த்தி யிருப்பதும் அப்பர நிலையில் முருகன் வீற்றிருத்தற்கு இடமாதல் பற்றிக் குன்றம் ‘ பரங்குன்றம் ’ எனப் படுவதும் பொருத்த முடைத்தாதல் அறிக.

## திருச்சீரலைவாய்.

இனி, இரண்டாவதாகக் கூறுவது இறைவன் உலகமாய் நிற்கும் பெருநிலையை. இந்நிலை, திருச்சீரலைவாயில் காணப்படுகின்றது. திருப்பரங்குன்றத்தில் அருவாயிருந்த முருகப் பெருமான் உருவத் திருமேனி தாங்கி ஆறுமுகமும் பன்னிருகையும் தொழில் செய்ய யானை மேற் கொண்டு திருச்சீரலைவாய்க்குச் செல்லுதலும் உரியன் என்பது இப் பகுதியின் சுருக்கம்.

முருகப் பெருமான் ஏறிய யானை எத்தகையது என்பதை முன்னர் உணர்த்துகின்றார் புலவர். கூரிய நுனியையுடைய அங்குசம் தாக்கியதால் உண்டாகிய வடுக்கள் நெற்றியில் ஆழ்ந்து காணப்படுகின்றன. உயர்ந்த இனத்து யானை என்பதை யுணர்த்தும் புள்ளிகளும் அந் நெற்றியில் விளங்குகின்றன. வாடாத பொன்னரி மாலை முகத்தில் தொங்க விடப்பட்டிருக்கின்றது. அது, யானை செல்லுங்கால் நெற்றிப் பட்டத்தொடுங் கிடந்து அழகாக அசைகின்றது. ஒலிக்கின்ற மணி அவ் யானையின் இருமருங்கும் ஓசையை எழுப்புகின்றன. இயல்பாகவே விரைந்து செல்லும் நடையை யுடையது. யமனைப் போலப் பிறரால் தடுத்தற்கரிய வலியையுடையது. செல்லத் தொடங்கினால் காற்று விரைந்து எழுவது போன்று விரைந்து நடக்கும் இயல்பினது. அத்தகைய உயர்ந்த யானையின்மேல் ஏறிக் கொண்டான் முருகப் பெருமான்.

அப் பெருமானுடைய அறு முகங்களுக்கு மேல் ஆறு மணி முடிகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு முடியும் தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம் என்ற ஐந்துறுப்புக்களை யுடையதாகக் காணப்படுகின்றது. அம் முடிகளில் பதிக்கப்பெற்று ஒன்றோடொன்று வேறுபாடில்லாத பல நிற மணிகள், மின்னலைப் போன்று ஒளியுடன் சென்னியில் பொலிந்து தோன்றுகின்றன. ஒவ்வொரு முகத்திலும் இருபுறத்தும் அமைந்த காதுகளில் ஒளியுடன் அசைகின்ற வேலைப்பாடு அமைந்த பொன்னாலியன்ற குண்டலங்கள் காணப்படுகின்றன. ஒளி வாய்ந்த முருகப் பெருமான் முகங்களின் இரு மருங்கும் அக் குண்டலங்கள் தொங்கி யசையும் தோற்றம், விண்ணில் விளங்கும் வெண்டிங்களை யகலாது சூழ்ந்துள்ள விண்மீன்களைப் போல ஒளி செய்கின்றன. குற்றமில்லாத கொள்கையுடையாய்த் தவமாகிய தந்தொழிலைச் செய்து முடிப்பவருடைய நெஞ்சிலே இந்த ஆறு முகங்களும் பொருந்தித் தோன்றும் இயல்பை யுடையனவாம்.

அவற்றுள், ஒருமுகம், மிக்க இருளையுடைய உலகம் குற்றமில்லாமல் விளங்கும்படிப் பல கிரணங்களையும் தோற்றுவித்தது. அம் முகத்திற்கேற்ற கையிரண்டில் ஒருகை, ஞாயிற்றின் வெம்மை உலகுயிர்களை வருத்தாதபடித் தாங்கி விண்ணில் திரிகின்ற வேலுவிகட்குப் பாதுகாவலாக ஏந்திய நிலையில் உள்ளது. மற்றொருகை மருங்கில் வைக்கப்பட்டுளது.

இரண்டாவது முகம் தன்பால் அன்பு செய்பவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அவர்க்கு இனிமையாக நடந்து அவர்மேற் சென்ற அன்பினால் மகிழ்ந்து அவர் வேண்டும் வரங்களைக் கொடுக்கும் இயல்பினது. அம் முகத்திற் கேற்ற கையிரண்டில் ஒருகை, அங்குசத்தைக் கொண்டு யானையைச் செலுத்துகின்றது. மற்றொருகை, செந்நிற ஆடையணிந்த தொடையின்மேல் கிடக்கின்றது. தன்னை அன்பால் நினைவார்பால் அவர் நினைந்தவுடன் யானை மேல் விரைந்து செல்லுதல் இயல்பு ஆதலின் வரங்கொடுக்கும் முகத்திற்குரிய கை அங்குசம் தாங்கியுளது.

மூன்றாவது முகம், மந்திரத்தையுடைய வேதவிதி வழுவாத அந்தணர் செய்யும் வேள்வியில் தீங்கு நிகழாதபடி நினைக்கு மியல்பினது. அம் முகத்திற்குரிய கையிரண்டும் வேலும் கேடகமும் ஏந்தி அசுரர் வந்து வேள்வியைக் கெடுக்காமல் காப்பாற்ற வேண்டி வலமாகச் சுழற்றுகின்றன.

நான்காவது முகம், இவ்வுலகத்து வழங்காத வேதங்களிலும் நூல்களிலுமுள்ள பொருள்களை முனிவர்கள் எமமுறும்படி ஆராய்ந்து சந்திரனைப் போலத் திக்குகளை யெல்லாம் விளக்கும் இயல்பினது. அம் முகத்திற்குரிய இரு கைகளில் ஒருகை, முனிவர்க்குத் தத்துவங் கடந்த பொருளைச் சொல்லாமல் சொல்லுதற்கு ஞான முத்திரையைக் காட்டிய வண்ணம் மார்பொடு விளங்குகின்றது. மற்றொருகை தாழ்ந்துள்ள மார்பின் மாலையோடு சேர்ந்து அழகுற விளங்குகின்றது. இறைவன் மோனமாய் ஞான முத்திரையைக்

காட்டிய வண்ணம் தானே யாக இருந்து பரம்பொருளைக் காட்டித்தர மாணாக்கர்கட்கு ஆனந்த மயமான ஒளி தானே நிறையும்.

ஐந்தாவது முகம், சென்ற போரில் வெகுண்டு வந்த பகைவர்களைத் தேய்த்து அழித்துக் கறுவுதல் கொண்ட மனத்தோடு களவேள்வி செய்தது. அம் முகத்திற் கேற்ற கையிரண்டில் ஒருகை, கீழ் வீழ்கின்ற வீர வளையோடு மேலே சுழன்று களவேள்விக்கு முத்திரை கொடுக்கும் இயல்பினது. மற்றொருகை, ஒலிக்கின்ற மணியை மாறி ஒலிக்கப்பண்ணு மியல்பினது.

ஆறாவது முகம், குறவருடைய இளமையுடைய மகளாகிய கொடியைப் போலும் இடையையுடைய மடப்பம் பொருந்திய வள்ளியம்மையாரோடு நகைத்தலை விரும்பும் இயல்பினது. காம நுகர்ச்சி யில்லாத கடவுள், உலகில் இல் வாழ்க்கை நடத்தற்காகவே இவ்வாறு நகை செய்கின்றான் என்க. அம் முகத்திற் கேற்ற கை யிரண்டில் ஒரு கை நீல நிறத்தையுடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்கின்றது. மற்றொருகை, தேவ உலகத்து வாழ்கின்ற தேவ மங்கையர்க்கு மண மாலையைச் சூட்டு கின்றது. உலகில் நிகழ்த்தப்படும் இல் வாழ்க்கை இனிது நடத்தற்கு மழையும் மணமும் இன்றியமையாமையின் இவைகளை அக்கைகள் செய்கின்றன. முத்துமாலை தொங்குகின்ற அழகிய மார்பிலே கிடக்கின்ற மூன்றுவரிகள் அழகின் உயர்வைக் காட்டிக் கொண்டிருக்கின்றன.

இவ்வாறு அவ்வாறு முகங்களும் செய்ய வேண்டிய முறைகளைப் பழகி நடத்து கின்றன. அவற்றிற் கேற்பப் பன்னிரண்டு கைகளும் உரிய தொழில் களைச் செய்கின்றன. விண்ணில் தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்குகின்றன. ஊது கொம்புகள் ஒலிக்கின்றன. சங்குகள் முழங்குகின்றன. இடிபோன்று முரசு முழங்குகின்றன. பல புள்ளிகளையுடைய மயில் முருகன் ஆணையால் வெற்றிக் கொடியிலிருந்து அகவுகின்றது. இவை இங்ஙனம் நிகழ விண்வழியாக விரைந்து செல்லுதலை மேற்கொண்டு நன்மக்களால் புகழப்பட்ட சிறந்த புகழினையுடைய திருச்சீரலைவாய் என்னும் பதியில் செல்ல எழுந்தருளுதலும் அம் முருகப் பெருமானுக்கு நிலைபெற்ற குணமாகும். என்பது அதன்விரிவு.

இப்பகுதி இறைவன் உலகமாய் விளங்கும் தன்மையை எவ்வாறு விளக்குகின்றது என்பதை நோக்குவோம். உருவமுடைய ஒரு பொருள், நாற்றிசையும் மேலும் கீழும் ஆகிய இரண்டு பக்கமும் ஆக ஆறு பக்கங்களையுடையதாதல் கண்கூடு. உலகம் வடிவ முடையது. அதற்கும் மேற்கூறிய ஆறு பக்கங்கள் உண்டு. உலக முழுதும் நோக்க வேண்டுமாயின் இந்த ஆறு பக்கங்களையும் பார்க்கவேண்டும். உலகமாகவும் உலகத்தின் ஆறு பக்கங்களாகவும் இருப்பவன் யானே என்பது தோன்றவே இறைவன் ஆறு முகமுடையனாக விளங்கின்றான் என்பது ஆன்றோர் முடிபு. இம்முறையால் முருகப்பெருமான் ஐம்பூதங்களாலாய உலகமாய் விளங்குகின்றான் என்பது

மேலும் அறுமுகமும் பன்னிருகையும் செய்யும் செயல்கள் யாவும் உலக நிகழ்ச்சி நன்கு நடைபெறச் செய்வன வாகவே விளங்குவதால் முருகன் கலப்பால் உலகமாய் விளங்குகின்றான் என்பது விளங்கும். பல்கதிர் விரிந்தன் றொருமுகம்" என்பதால் ஞாயிறாக ஒளி செய்கின்றான் என்பதும் "திங்கள் போல் திசைவிளக்கும்" என உவமை முகத்தான் விளக்கி யிருத்தலால் திங்களின் தன்மையனாக இருக்கின்றான் என்பதும் பெறப்படும். திங்களுக்கு உரிய ஒளி ஞாயிற்றின் பால் பெற்றமையே யாதலின் ஞாயிறாக அவன் விளங்கு கின்றான் என்றமையால் திங்களாகவும் இருக்கின்றான் என்பதைப் பெற வைத்தார் என்றலும் ஒன்று. எனவே முருகப்பெருமான் திங்களும் ஞா யிறுமாக இருக்கின்றான் என்பது பெறப்படும்.

இனி, யுயிர்கள், இவ்வுலகத்து நுகர்தற்கு வேண்டியவற்றை வேண்டி யாங்குப் பெற விரும்புவனவும், மறுமைக்கண் தேவராதற் பொருட்டு வேள்வி முதலிய வற்றைச் செய்யு மியல்பினவும், இந்த இம்மைப் பயனையும் மறு மைப் பயனையும் பெற விரும்பாது ஞானம் ஒன்றையே நோக்குவனவும் என முத்திறத்தினவாகக் கொள்ளலாம். இம்முத்திற உயிர்கட்கும் முருகன், வாங் கொடுக்கு முகத்தானும் நகையமர்ந்த முகத்தானும் களம் வேட்கும் முகத்தா னும் வேண்டிய பொருள்களை யளித்தும் அன்புறுத்தியும் இம்மைப் பயனை யளிக்கின்றான். வேள்வியோர்க்கும் முகத்தால் மறுமைப் பயனை யளிக்கின் றான். திங்கள் போல் திசைவிளக்கு முகத்தான் ஞானத்தை யளிக்கின்றான்; வீடுபேற்றின் பொருட்டு. உயிர்கள் இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் வீட்டின் பத்தையும் எய்தும் பொருட்டு முருகப் பெருமான் இன்ப முதலிய வற்றை யுறுகின்றான் என்பது இங்குப் பெறப்படுகின்றது. படவே, முருகன் கலப்பால் உயிர்களாகின்றான் என்பது போதரும். இதனால் ஐம்பூதங்களால் இயன்ற உலகமாகவும் திங்களாகவும் ஞாயிறாகவும் இயமானனாகவும் விளங்கி முருகப் பெருமான் உலகமே யாகின்றான் என்பது தெளிவாம். பரங்குன் றத்தை நோக்கத் திருச்சீரலைவாய் தாழ்ந்த இடத்தின் கண் இருத்தலும் பரங் குன்றத்தில் தத்துவங் கடந்து தானேயாய் நிற்கும் இறைவன், தன் சிறப் பியல்பிலிருந்து இறங்கி உலகமாய் நிற்கும் பொதுவியல் பிறகு வந்ததாகக் கூறுதலும் எத்துணைப் பொருத்தமாகக் காணப்படுகின்றது காண்மின்!

## திருவாவிநன்குடி.

இப்பகுதியில் முருகப்பெருமான், உயிர்க்குயிராதல் தன்மையால் உலக மோடுடனாய் நிற்கும் உடனிலையை யுணர்த்துகின்றார் புலவர். திருமால் முதலிய தேவர்கள் பிரமன் பொருட்டு வந்து தன்னைக் காண வள்ளி யம்மை யாரோடு ஆவிநன் குடியில் உறைதலும் உரியன் முருகன்; என்பது இங்குக் கூறப்படும் பொருள்.

முருகப் பெருமான் அசுரரை யழித்துத் தெய்வயானையை மணந்த போது தம் கையிலுள்ள வேற்படையை நோக்கி 'நமக்கு எல்லாம் தந்தது

இவ்வேல்' என' அப்போது அருகே யிருந்த பிரமன், 'இவ்வேலுக்கு இப் பெருமை எம்மால் வந்ததே' என்றானாக நம் வேலுக்கு நீ கொடுப்ப தொரு சத்தியுண்டோ என முருகக்கடவுள் சினந்து 'இங்ஙனம் கூறிய நீ பூமியிற் பிறப்பாயாக' என்று சாபமிட்டார். அன்று தொட்டுப் பிரமன் பூமியில் பிறந்து உழலுகின்றான். அப்பிரமன் சாபத்தை நீக்குமாறு வேண்டிக் கொள்ளவே திருமால் முதலிய தேவர்கள் திருவாவினன் குடிக்குச் செல்கின்றார்கள். தேவர்களுக்கு முன்னதாக முனிவர் புதுகின்றனர். அமைதியான தோற்ற முடைய இம் முனிவர்களை மறுது ஏற்றுக் கொள்வான் முருகன். இம் முனிவரைக் கண்ட அமைதித் தன்மையால் பின் வருபவர்களையும் மறுக்காமல் ஏற்றுக் கொள்வான் என்னுங் கருத்தால் இவர்கள் முன்னே புதுகின்றனர். இம் முனிவர் இயல்பை ஓவியமாக வரைந்து காட்டுகின்றார் புலவர்.

## முனிவர்.

மரவுரியை உடையாக உடுத்துள்ளனர். வடிவாலும் நிறத்ாலும் வலம்புரிச் சங்கையொத்த நரைமுடி யுடையவராக விளங்குகின்றனர். எக்காலத்தும் நீராடுதலால் அழுக்கில்லாமல் விளங்குகின்றது அவர்களுடம்பு. அவர்கள்மார்பு மான் தோலால் போர்க்கப் பட்டுளது. விரதங்களால் தசை கெட்டிருப்பதால் அம்மார்பில் எலும்புகள் எழுந்து கோவையாகத் தோன்றி அசைகின்றன. பலநாளாக உணவின்றிக் கழிந்த நோன்பினையுடையவர்கள். அவர்கள் மனத்தில் மாறுபாடு மில்லை; செற்றமுமில்லை. அவர்கள் இயற்கை யறிவு, எல்லாவற்றையும் கற்றவராலும் அறிய வியலாத பெருமையது. கற்றவர்க் கெல்லாம் தாம் எல்லை யாக நிற்கும் தலைமை யுடையவர்கள். அவ்வறிவின் திறத்தால் காமத்தையும் கடுஞ்சினத்தையும் அறவே நீக்கினவர்கள். தவத்தின் கடுமையால் மெய்வருத்தம் காணப் படினும் மனத்தினால் வருத்தஞ் சிறிதும் அறியப்படாத இயல்பினர். யாரிடத்தும் வெறுப்பில்லாத நல்லறி வினையுடையவர்கள். இத்தகைய முனிவர்கள் முன்னே புகுகின்றனர் முருகனிடத்திற்கு

அழுக்கடையாப் புறத் தூய்மையையும் காம வெகுளி மயக்கம் ஆகிய முக்குற்றமும் முறையி னீங்கிய அகத் தூய்மையையும் உடைய முனிவர் குழாத்தைக் கண்டால் முருகன் பிரமன்பால் கொண்ட செற்றம் குறைவது இயற்கை யன்றோ? இம்முனிவர் குழாத்தைக் கண்ட பின்னரும் வெகுளி சிறிது உளதாயின் அதையும் துடைக்கும் பொருட்டு இன்னும் ஒருகுழாம் வருகின்றது. அது கந்தருவர் குழாம்; ஆணும் பெண்ணும் கலந்த குழாம் அது. அக்குழாத்தில் உள்ளவர்கள் எத்தகையினர் என்பதை நோக்குவோம்.

## கருந்தருவர்

அக்கந்தருவர்கள், புகையை முகந்து கொண்டது போன்ற அழுக்கிலாத் தூயமெல்லிய உடையணிந் துள்ளார்கள். அவர்கள் மார்பில் அரும்பு சிறிது அலர்ந்த மலர்மாலை கிடந்து அசைகின்றது. செவியாலே சுருதியை

யளந்து கட்டின சுற்றுதல் பொருந்திய வார்க்கட்டினை யுடைய நல்ல யாழி சையிலே பயின்ற ஈரமுடைய நெஞ்சினாலே எக்காலத்தும் மெல்லிய மொழி களையே சொல்லுதலில் விருப்ப முள்ளவர்கள். இத்தகையவர்கள் இனிய யாழ் வாசிக்கின்றார்கள். இவர்கள் ஆடவர். இவர்களொடு பெண்டிரும் வருகின்றனர். அவர்கள், மக்களைத் தவரும் நோயே இல்லாமல் இயன்றுள்ள உடம்பை யுடையவர்கள். அவர்கள் மேனி மாந்தளிர் போன்றுவிளங்கு கின்றது அந்தமேனியில் தேமல் ஒளி வீசுகின்றது. அது ஒளி வீசுந் தோறும் பொன்னை உரைத்தாற்போல் விளங்கு கின்றது அவர்களிடையில் பருமம் என்னும் அணியை அணிந் துள்ளார்கள். அது கண்ணுக்கினிய ஒளியை யுடையதாய்ப் பதினெண் கோவை யுடையதாகக் காணப்படு கின்றது. இத்தகைய குற்றம் மற்ற மகளிர் அவ்வாடவர் அருகே பாடிக் கொண்டு வருகின்றனர்.

முன்வந்த முனிவர் குழாத்தில் துறவு நிலையைப் பார்க்கின்றோம். கந்தருவர் குழாத்தில் இல்லற நிலையைப் பார்க்கின்றோம். முனிவர் யாவரும் ஆடவர்களே. கந்தருவர் குழாத்தில் ஆடவருப் பெண்டிரும் கலந்து காட்சி யளிக்கின்றனர். முனிவர் குழாத்தில் நரை முடியும் ஒட்டிய வயிறும் எலும்பு தோன்றும் மார்பும் காணப் படுகின்றன. கந்தருவர் குழாத்திலே மாந்தளிர் போன்ற மேனியையும் பொன் போன்ற தேம்பலையும் நோயின்றியன்ற நல்லுடம்பையும் காண்கின்றோம் முனிவர் உடுத்திருப்பது மாவுரி; கந்தருவர் உடையோ புகை முகந்தாற்போன்ற தூய மெல்லிய அழகிய ஆடையாகும். முனிவர் குழாத்தில் அமைதி நிலவுகின்றது; கந்தருவர் குழாத்தில் யாழொலி யும் பாட்டொலியும் இனிதாக எழுகின்றன. கந்தருவர் குழாத்தில் உடம்பின் தோற்றத்தாலும் மொழி வழி தோன்றும் இன்னிசையாலும் கண்ணுக்கும் செவிக்கும் நுகர்ச்சியுண்டு. ஆனால் முனிவர் குழாத்திலோ கண்ணுக்கினிய விருந்துமில்லை; காதுக்கினிய விருந்துமில்லை. புறத்தோற்றம் விரும்பிக் காணத்தக்க கவினுடையதாக வில்லை. அம் முனிவர் அகத் தோற்றமோ மிகமிகச் சிறந்து விளங்குகின்றது! கந்தருவர் குழாத்தின் அகத் தோற்றத் தைப் பற்றி யாதும் உணர வியல வில்லை; உடம்பின் புறத்தோற்றமும் மென் மொழியுமே காணவும் கேட்கவும் இயலுகின்றது. முனிவர் குழாத் திலுள்ள உள்ளொளி, உணர்ந்தோர் உள்ளங்களில் இருளைப் போக்கி ஒளி யுண்டாக்கும் தன்மையதாகக் காணப்படுகின்றது. மெய்யும் மொழியும் மனத் தின் வழியவே யாதலின், மெய்யழகைவிட மொழியழகைவிட மனத்தழகே சிறந்தது என்பது கூறவும் வேண்டுமோ? அம்முனிவர் உள்ளத்தில் காம வெகுளி மயக்கங் கட்கு இடமே யில்லை. நூலறிவாகிய அபரஞானத்தாலும் அநுபவவுணர்வாகிய பரஞானத்தாலும் அவர்கள் உள்ளம் ஒளிமயமாய்த் திகழ்கின்றது. ஓவியராலும் வரைந்து காட்ட வியலாத முனிவர் உள் ளொளியை நன்கு விளக்கிக் காட்டுகின்றார் புலவர்.

## தேவர்.

இத்தகைய முனிவர் உள்ளொளியால் அமைதியை யுண்டாக்கிக் கொண்டு முன் புகுந்ததாலும் கந்தருவர் இன்னிசையால் அமைதியை யுண்டாக்கிக் கொண்டு பின் புகுந்ததாலும் முருகப் பெருமான் நல்ல செவ்வியனாக இருப்பான் என்று துணிந்து மாமனாகிய திருமால் வருகின்றான். மாமனைக் கண்டால் மருகனாகிய முருகனுக்கு அன்பே மிகுதல் இயல்பன்றோ? மேலும் பிரமன் தன்மகனாதலின் அவன் துயர் நீக்கும் உரிமையும் விரைவும் தோன்ற முன்னர் வருகின்றான் திருமால். யாவரும் அஞ்சத்தக்க நஞ்சுடைய பாம்பு அழியும்படி அழிக்கின்ற கருடக் கொடியை யுடையனாய் அத் திருமால் புகுகின்றான்; சேய்மையில் வரும்பொழுதே கொடியைக் கொண்டு தன்னை யுணரவேண்டி. அவற்குப்பின் வெள்ளேற்றுக் கொடி தோன்றுகின்றது, அக்கொடி, மங்கை பங்கனாகிய முக்கண்ணனுடையது, அக்கொடியுடன் திரிபுர மெரிசெய்த அவ் விரிசடைக் கடவுள் தோன்றுகின்றான். "தாய் தந்தையை மதித்து அவர் விருப்பியதைச் செய்வது மகன் கடமை யென்பதை யுணர்ந்து பிரமன் சாபத்தை நீக்கியருளுவான் முருகன்" என்று மங்கை பங்கன் வருதல் முறைதானே.

அவற்குப் பின் ஆயிரங் கண்களை யுடையவனும் நூறு பரிவேள்வி செய்தவனும் பகைவர்களை வென்று கொண்ட வெற்றியை யுடையவனும் ஆகிய இந்திரன் வருகின்றான், ஐராவதம் என்னும் யானைமேல். அந்த யானை, நான்கு கொம்புகளை யுடையது; அழகிய நடையுடையது; நிலத்தே தாழ்ந்த பெரிய துதிக்கை யுடையது. முருகனுக்குத் தெய்வ யானையை யீன்றளித்து மாமன் என்னும் உரிமை பெற்ற இந்திரன், யானைமேல் பெருமையும் உரிமையும் தோன்ற வருதல் பொருத்தமே யன்றோ?

நல்ல நகரங்கள் நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒரு நோக்கத்தையே விரும்பி மேற்கொண்டுள்ள அரன், அரி, அயன், இந்திரன் ஆகிய நான்கு பெருந் தெய்வங்களுள் தாமரையால் பெறப்பட்டவனும் அழிவில்லாத ஆயுளை யுடையவனும் ஆய நான்முகனாகிய ஒருவனைச் சாபத்தினின்றும் நீக்கக்கருதிப் பலராலும் புகழப் படுகின்ற மேற் சொன்ன ஏனை மூவரும தேவர் குழாத்திற்குத் தலைவராகப் பகல் போல விளங்கும் மாறுபடாத நல்லறிவினை யுடைய வசுக்கள், மருத்துவர், ஆதித்தர், உருத்திரர் என்னும் உயர் நிலை பெற்ற முப்பத்து மூவரோடும் பதினெண் வகைப்பட்ட தேவகணங்கள், விண் மீன்கள் பூத்தாற் போன்ற தோற்ற முடையாராயும் அவ்விண் மீன்களைச் சேர்ந்து காற்று எழுந்தாற் போன்ற விரைந்த நடையினை யுடையாராயும் காற்றுக் கிடையில் தீயெழுந்தாற் போன்ற வலிமையுடையவர்களாயும் தீயுண்டாகுமாறு இடி யிடித்தாற்போன்ற குரலினை யுடையவர்களாயும் தாம் அடைந்துள்ள குறை தீர்க்கப்பட வேண்டிய முறையிலே விண் வழியாக இன்ப மிக்க மண்ணுலகிலே வந்து தோன்றி ஒரு சேரக்காண் கின்றார்கள்;

முருகப் பெருமான், இங்ஙனம் அத்தேவர்கள் காணுமாறு வருத்த மில்லாத அருட்கற் பினையுடைய வள்ளி யுடன் சிலநாள் ஆவி நன்குடி என்னும் ஊரில் இருத்தலும் உரியன்; என்பது அப்பகுதியின் விரி.

முன்னே முனிவர் குழாம் செல்லப் பின்னர் கந்தருவர் குழாம் செல்ல அவர்க்குப் பின்னே அரி அரன் இந்திரன் ஆகிய மூவரைத் தலைவராகக் கொண்ட தேவர் குழாம் புகுந்து முருகன்பால் தங்குறையைத் தெரிவிக்கச் சென்று காண்கின்றது. இங்ஙனம் தேவர்கள் தரிசிக்க வள்ளி யம்மை யாரோடு முருகன் ஆவிநன்குடியில் சிலநாள் தங்கி யிருப்பான் என்று புலவர் கூறுகின்றார்.

திருச்சீரலைவாயில் ஆறு முகமுடைய முருகன் திருவுருவத்தைக் கூறினா ரன்றித் தேவியாரைக் கூற வில்லை. ஆவிநன் குடியில் அம்முருகன் தேவி யொடு வீற்றிருக்கும் நிலையை விளம்புகின்றார். இந்நிலையே இறைவன், உயிர்க் குயிராதல் தன்மையால் "உலக மோடுடனாதலாகிய நிலையாகும். சர்வம் சத்திமயம் சகத்" என்பது வேதவாக்கியம். இதனை, "அனைத்தும் தன் மய மெனும் சுருதி கரியாவைத்தும்" என்னும் (முத்துக்குமாரசாமி பிள் ளைத் தமிழ் 12) ஓதாதுணர்ந்த குமர குருபரருடைய திருவாக் கானுணரலாம். உலகமயமாய் விளங்கும் சத்திக்கு உயிராய் அச்சத்தியுடன் வீற்றிருப்பதே உயிர்க் குயிராய் நிற்கும் உடனாதல் தன்மையை நன்கு விளக்குதல் காண்க.

மேலும் உயிர்கள் தம் மலநோய்நீங்க இறைவன் திருக்கூத்தைக் காண வேண்டி யிருக்க அவ்வுயிர்களின் சார்பாகச் சத்தியே அக்கூத்தைக் காண் கின்றாள் என்பதை :

'பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென
நோயுண் மருந்து தாயுண்டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வைய மீன்றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூல் கொண்ட வையரித்தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலிய திருநடம் புரியும்"

("சிதம்பரமும்மணிக்-1")

என்று குமரகுருபரர் கூறியிருத்தல் காண்க. இதனால் சத்தியே உயிர் கட்குப் பிரதிநிதியாதல் விளங்கும். உலகுயிர்க் கெல்லாம் முருகன் உயிரா யிருத்தலை, அவ்வுயிகட்குப் பிரதிநிதியாக விளங்கும் சத்தியின் உயிர்க் குயிராய் இருந்து காட்டுவதே சாலப் பொருத்தமாதல் காண்க. அச் சத்தி தானும் மண்ணுலக மாதாகிய வள்ளியம்மையாதல் எவ்வளவு பொருத்தம் என்பதை அறிக. இங்ஙனமன்றி உடனாதல் தன்மையை விளக்க ஒண்ணு மையை நுனித்துணர்க. பழநியுள் குமரகுறத் தத்தைக்குப் பாங்காம் பெரு

மானே" (585) என்ற அருணகிரியார் வாக்கால் ஈண்டு "மடந்தை" என்றது வள்ளியையே என்பது விளங்கும்.

திருப்பரங் குன்றத்தில் உலகிற்கு வேறாய்த் தனித்திருக்கும் பரநிலையினையும் திருச்சீரலைவாயில் கலப்பால் உலகமே யாகும் பெருநிலையினையும் திருவாவினன்குடியில் உயிர்க் குயிராதல் தன்மையால் உடனாம் நிலையினையும் முறையாக விளக்கினார் சீவன் முத்தராம் பெரும்புலவர். இங்ஙனம் புண்ணியத் தலங்களொடு பொருத்தி இறைவனுடைய மூவகை இலக்கணங்களை யுணர்த்தாக்கால் வீடுவரும்பிய புலவன் இறைவனை யுள்ளவாறு உணர்தலும் திருவடிப் பேற்றினைப் பெறுதலும் கூடாமை யுணர்க. இறைவனுடைய மூவகை நிலைகளை யுணர்ந்த புலவன், இறைவனை இம்மூவகை நிலையில் வைத்து வழிபடுவோர் இவர்; வழிபடுவது இவ்வாறு என்பதை நன்கு உணர்ந்தாலன்றித் தான் வழிபாடு செய்து பயன் எய்தல் இயலாது ஆதலின், அம்மூவகை நிலையில் வைத்து வழிபடுவோர் நிலைகளையும் திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்ற மூவிடத்தும் வைத்து முறையே விளக்குகின்றார்.

## திருவேரகம்.

முருகன் திருவேரகத்தில் அந்தணர் மலர்தூவி மந்திரமோதி வழிபடத் தங்குதற்கு உரியவன் என்பதை விளக்குகின்றார்.

திருவேரகத்துள்ள முருகனை வழிபடத் தூய்மையான ஒரு குழுவினர் வருகின்றனர். அவர்கள் மார்பில் பூணூல் காட்சி யளிக்கின்றது; ஒன்பது இழைகளைக் கொண்டு செய்த மூன்று புரியுடையதாகக் காணப் படுகின்றது அது. அந்தப் பூணூலையும் உடம்பின் தோற்றத்தையும் காணும் போதே அவர்கள் அந்தணர்கள்; மறையில் கூறிய முறைப்படி நாற்பத்தெட்டு வளமை நல்யாண்டுகள் காறும் பிரமசரியம் மேற்கொண்டு காத்தவர்கள்; அறத்தைப் பயின்ற கொள்கையை யுடையவர்கள்; ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல் ஏற்றல் என்னும் அறுதொழிலையும் வழுவாது செய்பவர்கள்; பலவகையாக வேறுபட்ட குடிகளில் உலகத்தார் நன்கு மதிக்கும் உயர் குடிப்பிறந்த தாய்தந்தை யர்களைக் கொண்டவர்கள்; மூன்று வகையாக வடிவமைத்து வளர்க்கப்படும் ஆகவனீயம், காருகபத்தியம், தென்திசையங்கி ஆகிய மூன்று தீயினையும் செல்வமாகப் பெற்றவர்கள்—போற்றுகின்றவர்கள்; என்பன யாவும் நன்கு விளங்கி விடுகின்றன.

அவர்கள் ஒவ்வொருவரும் ஈரம்புலராத ஆடையைத் தானே யுலருமாறு உடுத்துக் கொண்டுள்ளனர்; இதனால் நீராடி நனைந்த மேனியோடு அப்படியே வருகின்றனர் என்பது விளங்குகின்றது. அவர்கள் கைகள் தலைமேல் குவிந்து காணப்படுகின்றது. அவர்கள் நாக்கு வாய்க்குள் அசைந்து கொண்டிருக்கின்றது; அதனால் ஏதோ சொல்லுகின்றார்கள்

என்பதை யறியலாம். ஆனால் ஒலியெழுவில்லை; பிறர் கேளாதபடி மந்திரம் உச்சரித்துக் கொண்டு மணமிக்க மலர்களை ஏந்திக் கொண்டு முருகனை அருச்சிக்கும் காலமறிந்து அருச்சிக்கின்றார்கள். அந்தணர்கள் இங்ஙனம் அருச்சிக்க அதற்குப் பெரிது மகிழ்ந்து 'ஏரகம்' என்னும் தலத்தில் இருத்தற்கும் உரியவன்; என்று புலவர் கூறுகின்றார்.

இந்த அந்தணர்கள், பூணூல் அணிந்து ஞானப் பிறப்பை யுற்றவர்கள்; மறை பயின்றவர்கள்; நாற்பத்தெட்டு யாண்டு பிரமசரியங் காத்தவர்கள்; தீயினை வணங்குபவர்கள்; என்பன அறிகின்றோம். இவ்வளவு தகுதிப்பாடு உடையவர்கள், இறைவனுடைய மூவகை யியல்புகளில் சிறந்ததாய உலகத்தின் வேறாய்த் தானேயாய் நிற்கும் தனிப் பர நிலையைத்தான் வழிபடுவார்கள் என்பதை யுறுதியாக நம்பலாம். அவர்கள் வழிபடும் முறையினை நோக்கினும் இது புலப்படும். "உச்சிக் கூப்பிய கையினர்" என்று அவர்கள் உடம்பின் செயலை விளக்குகின்றார் புலவர். மண் முதலாய தத்துவங்களாலியன்ற உடம்பில் தலையே மேல் நிலையில் உள்ளது. அத் தலைக்குமேல் கைகுவித்து வழிபடுகின்றார்கள். இச் செயலை நோக்கின், தத்துவங் கடந்து தானேயாய் நிற்கும் பர நிலையினைக் கருதி வழிபடுகின்றார்கள் என்பது தெற்றெனப் புலப்படும்.

இனி, மொழி வழிபாடாகிய மந்திரம் கூறும் பொழுதும் பிறர் அறிய் வியலாதபடி உச்சரித்தனர் என்பதை யறிகின்றோம். பிறர் அறிய உச்சரித்தால் ஓசை யெழும்: அவ்வோசை ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய விண்ணிற்குரியதாகும். விண்முதற் பூதங்கட்கு அப்பாற்பட்ட பர நிலையிலுள்ள ஓசையாலுணர்வார்க்கு உணர்வரிய பரம்பொருளை விண்ணின் தன்மையாய ஓசையை யெழுப்பி வழிபடுதல் அமையாதென்று கருதியே அங்ஙனம் உச்சரித்தனர் என்பதை யறியலாம். இனி, மன வழிபாடும் தானேயாய் நிற்கும் பர நிலையினையே குறித்து நிகழ்ந்தது என்பதை யூகித்தறியலாம். புலவர், 'மனமொழி மெய்' என்னும் முக்காண வழிபாட்டில் மெய்யினாலாய வழிபாட்டையும் மொழியினாலாய வழிபாட்டையும் வெளிப்படையாகக் கூறி மன வழிபாட்டைக் குறிப்பால்,—"விரையுறு நறுமலரேந்தி" என்பதால் அறிய வைத்துள்ளார். உருவமுடைய மலரில் உள்ள மணம், அம்மலர் முழுதும் பரவி அம் மலரைக் கடந்தும் அருவாய் நிற்றலால், உலக முழுவதும் வியாபித்தும் உலகைக் கடந்தும் அருவாய் நிற்கும் பரம்பானுக்குத் தக்க உவமையாதல் கண்ட அந்தணர், தம் கருத்தை அம் மலர்களைக் கொண்டு விளக்கினார்கள். மலரின் மணம்போலப் பற்ற முடியாத நின் பர நிலையையே எம் முள்ளம் நீடு நினைகின்றது என்பதையே முருகன் முன்னிலையில் அம் மலர்களைக் கொண்டு அவர்கள் விளக்கினார்கள். 'நறு மலர்' என்னாது "விரையுறு நறுமலர்" என்றதும் அச் சிறப்பைப் புலப்படுத்தவேயாம். பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் அறிய வியலாத தத்துவங்

கடந்த பரம் பொருளைக் கூறுமிடத்து, "நறுமலரெழுதரு நாற்றம் போல் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" என மணி வாசகப் பெருமான் விளக்கி யிருத்தல் ஈண்டு நினைவு கூர்தற்குரியது. எனவே அவ் வந்தணர்கள், மனமொழி மெய்களால் தத்துவங் கடந்து ஞானமாய் நிற்கும் தனிப் பர நிலையையே வழிபட்டார்கள் என்பதை நன்குணர்கின்றோம்.

இங்ஙனம் தன் சிறப்பியல்பாகிய ஞானமாய் நிலையை யுணர்ந்து வழிபடும் அந்தணர் வழிபாட்டின் சிறப்பை நினைந்தே முருகனும் "பெரிது வந்து" ஏரகத்து உறைவதாகக் கூறுகின்றார் புலவர். 'குன்றுதோறாடல்' என்னும் பகுதியில் இவ்வாறு கூறாது, "குன்றுதோறாடலும் நின்றதன் பண்பே" என்றே கூறி யொழிதல் காண்க. பர நிலையை விளக்கும் பரங்குன்றத் திருப்பைக் கூறுங்கால் "குன்றமர்ந் துறைதலு முரியன்" என அமர்ந்துறைவதாகச் சிறப்பித்ததையும் ஈண்டு நினைக்க

## குன்றுதோறாடல்.

பூசாரியாகிய வேலன், முருகனைப் போல வேடந் தாங்கி மகளிரொடு கூடிக் குன்றுதோறும் ஆடும் ஆடலும் அம் முருகப் பெருமானுடைய நிலை பெற்ற பண்பே யாம் என்பதை இப் பகுதியில் விளக்குகின்றார் புலவர்.

குன்றத்திலுள்ள சிறு குடியில் பெரிய ஆரவாரம் எழுகின்றது. அது என்ன ஆரவாரம் என்பதை வேலன் நோக்குகின்றான். அது குரவைக் கூத்தின் ஆரவாரம் என்பதை வேலன் நோக்கி யறிகின்றான். ஆடுகின்றவர்கள், கொடுந் தொழிலையுடைய வில்லினால் கொல்லும் இயல்புடைய குறவர்கள், அவர்கள் மார்பில் நறுமணமுடைய சந்தனப் பூசிக் கொண்டிருக்கின்றார்கள். அது அழகான நிறத்தோடு எழுச்சி பெற்று விளங்குகின்றது. அவர்கள் ஆடலை நோக்கும் போது அவர்கள் சுற்றத்தோடு சிறந்த மது மாந்தி ஆடுகின்றார்கள் என்று புலப்படுகின்றது. அந்தக் கள் தானும் நீண்ட மூங்கில் குழாயில் வைத்துப் புளிப்பேற்றிய தேறல் செய்த கள்ளின் தெளிவாக இருக்க வேண்டும் என்பது அவர் மகிழ்ச்சி மிகுதியால் தெரிகின்றது. மலைக்குரிய தொண்டகப் பறை நன்கு முழங்குகின்றது. அம் மகிழ்ச்சியால் ஆடவரும் பெண்டிருமாக அக் குறவர்கள் கைகோத்துக் குரவை/ கூத்தாடுகின்றார்கள்.

இக் குரவைக் கூத்தைக் கண்ட வேலனுக்குத் தானும் அவ்வாறு ஆட வேண்டும் என்ற எண்ணம் எழுகின்றது. ஆனால் அவர்கள் போல் மதுவுண்ட மயக்கத்தால் ஆட விரும்பவில்லை. முருகன்பால் தனக்குள்ள அன்பு எனும் நறவ மாந்தித் தெளிந்தாட விரும்பினான். அன்பு மிகுதியால் தன்னை முருகனாகவே கருதிக் கொண்டான். முருகனும் அவன் அன்பைக் கண்டு அவன் மேல் ஆவேசித்தான். வேலன் முருகன் போல் வேடம் புனைகின்றான்,

பச்சிலைக் கொடியையே நாராகக் கொண்டு நறு மணமுடைய சாதிக் காயை இடையிடையே வைத்து அழகிய புட்டில்போல் விளங்கும் ஏலக் காயையும் கலந்து காட்டு மல்லிகையொடு வெண்கூதாள மலரையும் வைத்துத் தொடுத்த கண்ணியைத் தலையில் சூடிக் கொண்டான். உடம்பெல்லாம் செந்நிறத்தைப் பூசிக் கொண்டான். சிவந்த ஆடையை யுடுத்துக் கொண்டான். சிவந்த அடியையுடைய அசோகந் தளிரைக் காதில் தொங்குமாறு அணிந்து கொண்டான். இடையில் கச்சைக் கட்டிக் கொண்டான். காலில் கழலை யணிந்து கொண்டான். வெட்சி மாலையைச் சூடிக் கொண்டான். சிறிய புள்ளிகளை யுடைய நுண்ணிய நறுமணம் வீசுகின்றதும் மென்மை யுடையதுமாய மேலாடையை இடையில் இறுகக் கட்டி இரு முனையும் நிலத்தில் வீழ்ந்து தொங்குமாறு விட்டுக் கொண்டான். குழலை யூதினான்; ஊது கொம்பை யூதினான். சிறிய பல வாத்தியங்களையும் எழுப்பினான். ஆட்டுக் கிடாயைப் பின் வரச் செய்தான். மயில்மேல் ஏறினான். குற்றமில்லாத கோழிக் கொடியை யுயர்த்தினான். நெடியனாகத் தோற்றம் அளிக்கின்றான். தோள்களில் தொடியினை யணிந்து கொண்டான்.

வேலன் இவ்வாறு வேடம் பூண்டு நின்ற குறிப்பை யுணர்ந்த தன்னைச் சேவிக்கும் மகளிரும் தம்மை யலங்கரித்துக் கொண்டு வந்து நிற்கின்றார்கள். அவர்கள் தலையில் அழகான கண்ணி காணப்படுகின்றது. அது, ஆழமான சுனையில் பூத்த மலர்களால் இயன்றது. சுனையில் மலராத முன்னமே கொய்து விரல்களால் வலிய அலர்த்திய மலர்களா லியன்று வேறுபட்ட பல மணம் வீசுந் தன்மையது. வண்டுகள் அதில் நீங்காது மொய்த்துக் கொண்டிருக்கின்றன. அக் கண்ணிக்குக் கீழ் இணையாகக் கட்டின மலர் மாலையைச் சுற்றின கூந்தல் காணப்படுகின்றது. அவர்கள் இடையில் பெரிய குளிர்ந்த தழையுடை காணப்படுகின்றது. அத் தழையுடை, கஞ்சாத் தழையையும் இலைகளோடு கூடிய ஏனைய நறுமணமுடைய மலர்களையும் சேர்த்து அவற்றிற்கு இடை யிடையே செவ்விய காம்பினையுடைய கடம்பினது வெண்மையான பூங்கொத்துக்களையும் இட்டு வண்டுகள் தேனுண்ணுமாறு கட்டியதாகும். அத்தகைய தழையுடையை முத்து வடங்கள் திருத்தமாக அணியப்பட்ட அவர்கள் மேனியில் கிடந்து அசையுமாறு உடுத்துக் கொண்டுள்ளார்கள். பலவண்ணத் தினையுடைய தழையுடை யுடுத்த அம் மகளிரைக் கண்டால் மயிலைக் கண்டாற் போலவே நினைக்க நேரும். அத்தகைய அழகு வாய்ந்த மட நடையுடையவர்களாய் வந்து நின்றவர்களோடு அவ்வேலன் சேர்ந்து கொண்டான்.

இந் நிகழ்ச்சியைக் கண்டு முருகனைப் பாடிச் சேவிக்கும் மகளிர் வருகின்றனர். அம் மகளிர், யாழ் நரம்பு ஆளத்தியோடு ஒத்து இனிய குரலை யுடையவர்களாகக் காணப்படுகின்றார்கள். தன்னுடைய ஆடலுக்கு அப்பாடு மகளிரும் வேண்டுமென்று அக் கூட்டத்தாரையும் சேர்த்துக் கொள்கின்றான்

வேலன். முழவு போன்ற தன் பெரிய கைகளால் பொருந்தச் சிலரை இரு தேவியர் போல ஏந்திக் கொள்கின்றான். மெல்லிய தோளையுடைய பல மான்பிணை போன்ற மகளிரைத் தழுவி அவர்கட்குத் தலைக்கையைக் கொடுத்துக் குன்றுதோறும் சென்று ஆடுகின்றான். இவ்வேலனது ஆடலும் அம்முருகனுடைய பண்பே யாகும் என்கின்றார் புலவர்.

இப் பகுதியில் கூறப்படும் வழிபாடு, இறைவன், கலப்பால் உலகமாம் நிலையை நினைந்து செய்யும் வழிபாடு என்பது தெளிவு. குன்றுதோறும் ஆடுவது முருகனல்லன்; முருகன் வேடம் பூண்ட வேலனே ஆடுகின்றான். ஆவேசத்தால் வேலன், முருகன் ஆகின்றான். சேவிக்கும் மகளிரும் அவ்வேலனை முருகனாகவே எண்ணுகின்றனர். வேலன், தன்னை முருகனாக எண்ணி முருகன் போல வேடம் பூண்டு முருகனுக்குரிய ஊர்தியும் கொடியும் உடையனாய் மகளிரொடு கூடியாடுகின்றான். இவ்வாடலே முருகன் வழிபாடாகும். இறைவன் கலப்பால் உலகமாகின்றான் என்று கருதிச் செய்யும் அபேத வழிபாட்டிற்கு இவ்வேலன் ஆடல் சிறந்த எடுத்துக் காட்டாகும் என்பதை நன்குணரலாம் 'உலகம்' என்பது உயிர்களை யுணர்த்தும். அவ்வுயிர்களுள் வீடுபெறுதற்குரிய சிறப்பியல்பு மக்களுக்கே யுண்டு அம்மக்களுள் குன்றில் வாழும் குறவன், இழிந்தவனாதல் கண் கூடு. அவ் விழிந்த வேலன் ஆடலையே தன்னுடலாகவும் அவ் வேலனையே தானாகவும் முருகன் ஏன்றருளினன் என்பது, இறைவன், உலகமே யாம் நிலையை யுணர்ந்து செய்யும் வழிபாட்டிற்குச் சிறந்த எடுத்துக் காட்டாதல் காண்க.

## பழமுதிர் சோலை.

இப் பகுதியில் முருகனை வழிபடுதற்குரிய பல விடங்களும் கூறப்படுகின்றன. குறமகள் முருகனை வழிபடு முறை சிறப்பாகக் கூறப்படுகின்றது. பழம் உதிர்கின்ற சோலை சூழ்ந்த மலைக்குரியன் முருகன் என்பதும் இங்குக் கூறப்படுகின்றது. 'பழமுதிர் சோலை மலை' என்பது ஒருதலம் என்று கொள்வாருமுளர். முருகனைக் கண்டவிடத்து ஏத்து முறையும் வாழ்த்து முறையும் அடியார்க்கிரங்கி அவன் அருள் செய்யு முறையும் இங்குதான் கூறப்படுகின்றன. திருப்பரங் குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம் என்னும் நான்கு தலங்களைக் கூறிய பின் பொதுவகையில் குன்றுதோறாடலையும் விளக்கிய புலவர், இங்ஙனம் வரையறைப்படாமல் அன்பர் வேண்டி வழிபடும் அழகிய இடங்களிலெல்லாம் முருகன் இருப்பான் என்பதை இப்பகுதியில் விளக்குகின்றார்.

சிறிய தினையரிசியை மலரொடு கலந்து பிரப்பரிசியாக வைத்து (பிரப்பங் கூடையில் வைக்கும் மரபுபற்றி இப்பெயர் பெற்றது) ஆட்டுக் கிடாயை யறுத்துக் கோழிக் கொடியுடனே முருகக் கடவுள் அவ்விடத்தே நிற்கும்படி நிறுத்தி ஊர்தோறும் மேற் கொண்ட சிறப்புப் பொருந்திய விழாவிலும் தங்குதற்குரியனே. அங்ஙனம் விழவு செய்யாமல் தன்பால் அன்புடையவர்

கள துதிக்கப் பொருந்தி யிருக்கும் இடத்திலும் தங்குதற்குரியன். வேலன் அமைத்த வெறியாடு களத்திலும் காட்டிலும் சோலையிலும் அழகு பொருந்திய ஆற்றிடைக் குறைகளிலும் ஆற்றங் கரைகளிலும் குளக்கரையிலும் இவற்றின் வேறுபட்ட பல விடங்களிலும் நாற்சந்தியிலும் முகச் சந்தியிலும் புதிய பூக்களையுடைய கடம்ப மரத்திலும் ஊர்க்கும் பொதுவாய்ப் பலரும் இருக்கும் மரத்தடியிலும் அம்பலத்திலும் கந்து நட்டுள்ள இடத்திலும் (அக்காலத்து வழிபாட்டிற் குரியதாயிருந்த நட்ட தறி) தங்குதற்குரியவனே. என்று கூறுகின்றார் புலவர்.

மேல் குன்றுதோறும் முருகன் ஆடலை விளக்கிய புலவர், நானிலத்துள் எஞ்சியுள்ள நிலங்களிலும் அவனிருத்தலை விளக்குகின்றார். காட்டில் இருப்பான் என்பதால் முல்லை நிலத்தும் காவும் துருத்தியும் யாறுங்குளனும் இருப்பான் என்பதால் மருத நிலத்தும் வேறு பல் வைப்பும் என்பதால் இவற்றிற்கு வேறாய நெய்தல் நிலத்தும் அவன் இருப்பான் என்பதைப் பெற வைத்தார். ஊர்களில் இயற்கையாக அவன் தங்கும் இடங்களைக் கூறுவாராய்ச் சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும் மன்றமும் பொதியிலும் கூறியுள்ளார். அவன் எல்லா இடங்களிலும் உள்ளான் என்பதையே இங்ஙனம் வகைப்படுத்திக் கூறியுள்ளார் புலவர் .என்பதை யூன்றி நோக்குவார் உணரலாம், இங்ஙனம் கூறிவந்த புலவர், இறுதியாகக் குறமகள் வழிபாட்டை விரிவாக விளக்கிச் செல்கின்றார்.

## குறமகள் வழிபாடு.

முருகனை வழிபட விரும்பிய குறமகள், முதற்கண் முருகனுடைய மாண்பு மிக்க தலைமையுடைய கோழிக் கொடியோடு சென்று நீராடினாள். பின்னர் அக் கொடியை நட்டு அதில் பொருந்துமாறு பாதுகாவலாக நெய்யும் வெண்சிறு கடுகும் அப்பினாள். முருகன் வந்து தங்குதற்குரிய இடத்தைத் தூய்மை செய்வதற்காக முருகன் மந்திரத்தை வாய்க்குள் சொல்லிக்கொண்டு வணங்கிச் செழு மலர்களைச் சிதறினாள். வேறுபட்ட வண்ணத்தை யுடைய இரண்டு ஆடைகளை உள்ளொன்றும் புறமொன்றுமாக உடுத்துக் கொண்டாள். செந்நிறமுடைய நூலைக் கையில் காப்பாகக் கட்டிக் கொண்டாள். வெண் பொரியை எங்கும் சிதறினாள். மிக்க வலியையுடைய பெரிய கால்களோடு கூடிய செழுமையான ஆட்டுக் கிடாயின் குருதியொடு கலந்த தூய வெள்ளரிசி சிலவற்றைப் பலியாக வைத்தாள். பல பிரப்பங் கூடையில் அளவாக வைக்கும் பண்டங்களை வைத்தாள். சிறிய பசிய மஞ்சளோடு கலந்த நறுமணப் பொருளை எங்கும் தெளித்தாள். பெரியதும் குளிர்ந்ததுமாகிய செவ்வலரிப் பூவால் தொடுத்த மணமிக்க மாலையை அளவொக்க அறுத்து எங்கும் தொங்கும்படிக் கட்டினாள். பெரிய மலைப் பக்கத்தேயுள்ள ஊர்கள் யாவும் வளமிக்கு வாழ்கவென வாழ்த்தினாள். நறுமணப் புகையை எழுப்பினாள். தன்னாட்டிற்கேற்ப முருகனைப் பொருளாகக் கொண்டு குறிஞ்

சிப் பண் பாடினாள். ஒலிக்கின்ற அருவிகள், இயற்கை வாத்தியங்களாக அவற்றோடு இனிய செயற்கை வாத்தியங்களும் முழங்கச் சிவந்த அழகிய பல மலர்களைத் தூவினாள். பிறகு அச்சம் வரும்படிக் குருதியொடு கலந்த செந்தினையைப் பரப்பினாள். (இது முருகன் திருவடி சுவடுபட வேண்டும் என்று பரப்பியதாக இருக்கலாம்) பிறகு முருகன் உவக்கும் வாத்தியங்களை வாசிக்கப் பண்ணினாள். உடனே அவள் விரும்பியபடி முருகப் பெருமான், தெய்வம் இல்லையென்று மாறுபட்டுக் கூறுகின்றவர்கள் அஞ்சும்படியாக அவள் எதிரே எல்லோருங் காண வருகின்றான். இவ்வாறு குறமகள், முருகனை வரச்செய்த அச்சம் பொருந்திய விசாலமான மலைக் கோயிலில் வெறியாடு களம் ஒலிக்கப் பாடிக் கொம்புகள் பலவற்றையும் சேர ஊதிக் கடிய ஓசையையுடைய மணியை ஒலிக்கச் செய்து கெடாத வலிமையையுடைய அவன் யானையினை வாழ்த்தி இங்ஙனம் வேண்டுவார் வேண்டியபடி விரும்பியவற்றைப் பெற்று வழிபடா நிற்க மேற் கூறிய அவ்வவ்விடங்களில் தங்குதலும் உரியன் இவ்விடங்களில் எல்லாம் அவன் உறைவான் என்றது யான் அறிந்தபடிக் கூறியதாகும் என்று புலவர் கூறுகின்றார்.

மேற் கூறிய இடங்கள் மக்கள் பலவகையான நிலையிலிருந்து வழிபடுதலையும் அவ் வழிபாட்டை யேற்றுக் கொண்டு முருகன் அவ்வவ் விடங்களில் உறைதலையும் சீவன் முத்தராய பெரும் புலவர், நேரில் கண்டு கண்டவற்றையே கூறுகின்றாராதலின் "ஆண்டாண்டுறைதலு மறிந்தவாறே" எனக் கூறினார். ஆற்றுப் படுத்துவோர் மேற் கொள்ள வேண்டிய நெறி முறையும் இதுவே யாகும். தான் சென்று வந்த வழிகளை யன்றிச் செல்லாது கேள்வியாலறிந்தவற்றை வழியனுப்பப்படுவோருக்குக் கூறுவது பொருந்தாது. அவை உண்மைக்கு மாறுபட்டனவாகவும் இருத்தல் கூடுமாகலின் என்க. மேல் குன்றுதோறாடலில் வேலன் வழிபாட்டைக் கூறி, இப் பகுதியில் குறமகள் வழிபாட்டைச் சிறப்பு வகையில் செப்பியது. இறைவனுடைய மூவகை நிலைகளில் உயிர்க்குயிராதல் தன்மையால் உடனாம் நிலையை யுணர்ந்து வழிபடு நிலையை விளக்க வேண்டியே யாம்.

வீடு பெறுதற்குரிய மக்களுள் குறவர் இழிந்தவர் என்பது முன்னமே அறிந்தது. அக் குலத்துக் குறமகளுக்கு முருகன் உயிர்க்குயிராய் இருப்பதை விளக்கினால் ஏனையோர் உயிர்க்குயிராதல் கூறாமலே பெறப்படும். குறமகள், தன்னுயிர்க்குயிராக முருகன் உடனிருக்கின்றான் என்பதை நன்குணர்ந்து அவனையே உயிர் நாயகனைக் கொண்டு வழிபடுகின்றாள். உலகத்து ஆடவரும் இறைவனையடைய எண்ணி வழிபடுங்கால் தம்மைப் பெண் பாலாகக் கருதி இறைவனைத் தலைவனாகக் கொண்டு வழிபடு முறையைத் தமிழ் நூல்களில் பரக்கக் காண்கின்றோம். இயற்கையாகவே பெண்ணாகப் பிறந்த இக் குறமகள், முருகனைத் தலைவனாக கொண்டு வழிபடுதல் சாலப் பொருத்தமாதல் காண்க, முன்பொரு குறமகள்—வள்ளி, இவ்வாறு வழிபட்டு

என்றும் முருகனுடனே யிருத்தலைப் பெற்றுளாள் என்பதும் ஈண்டு நினைத்தற்குரியது. இக் குறமகள், முருகனையே தலைவனாகக் கொண்டவளாதலின் தனக்கென்று ஒன்று வேண்டாதவளாயினாள். உலகத் துயிர்க்கெல்லாம் தானே பிரதிநிதியாக நின்று வழிபடுகின்றாள்.. இவள் வழிபாடு தன்னலங் கருதாது என்பதை: "நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி" என்ற தொடரால் அறியலாம். உலகத்துப் பெருநர்பாலார், கடவுளை வழிபடுங்கால் தாம் வாழ வேண்டியே வழிபடுவர். இவள், அங்ஙனமின்றி நல்ல நகரிலுள்ளாரை வாழ்த்துகின்றாள். உயிராகிய தான் வாழ்த்தினால் ஏனையுயிர்களை வாழ வைக்க வியலாது. தன்னுயிர்க்குயிராக விளங்கும் இறைவனே வாழ்விக்க வேண்டும். இங்கு கருதிய பொது நிலையில் நின்று வாழ்த்தாது 'தன்னுயிர்க்குயிர் முருகனே' என நீடு நினைந்து வழிபடும் சிறப்பான வழிபாட்டு நிலையில் நின்று வாழ்த்துகின்றாள். இந் நிலையில் உயிராகிய தான் வாழ்த்தினால் உயிர்க்குயிராகிய முருகன் வாழ்த்தவனே யாவான் என்பதை நன்குணர்ந்து இங்ஙனம் வாழ்த்துகின்றாள். குறமகள் ஆற்றல் மிக்க அன்பால் முருகன் தன் முன் வரல் வேண்டுமென நினைந்து வழிபடுகின்றாள். அவள் உள்ளியதை யுடனிருந்து அறிந்த முருகன் அப்பொழுதே அவள் முன் வருகின்றான். இதுவே குறமகள், உயிர்க்குயிராய் உடனுயிருக்கும் தன்மையை யுணர்ந்து வழிபட்டாள் என்பதற்குச் சிறந்த சான்றாகும். முருகன், குறமகள் விரும்பிய வண்ணம் வந்து நின்றதைக் கண்டு கடவுள் இல்லையென்று தருக்கிக் கூறினவர்கள் எல்லாம் அஞ்சி நடுங்குகின்றனர். முருகன், தானே குறமகள் உயிர்க்குயிராயிருத்தலை இவ்வாறு வந்து நின்று உணர்த்துகின்றான்.

திருவேரகத்தில் அந்தணர் வழிபாட்டிலும் வேலன் வெறியாட்டிலும் முருகன் வந்ததாகக் கூறாது இங்குக் குறமகள் வழிபாட்டில் வந்ததாகக் கூறியது, முருகன் உயிரோடுடனுந் தன்மையை விளக்கும் பொருட்டேயாம். சிவன் முத்தாம் பெரும் புலவர், இங்ஙனம் முருகன் மூவகை நிலையில் உறையும் இடங்களையும் அம் மூவகை நிலைகளை யறிந்து வழிபடும் இடங்களையும் அவை போன்ற பிற இடங்களையும் வீடு விரும்பிய புலவனுக்கு விளங்கக் கூறினார். மேலும் அவனைக் கண்ட விடத்துத் துதிக்கும் முறையை விவரிக்கின்றார்.

யான் கூறிய இவ்விடங்களில் ஆயினும் ஆக வேறு இடங்களிலாயினுமாக முன்னே நீ எங்கு அழகு பொருந்த அம் முருகனைக் காண்கின்றாயோ அவ்விடத்து முகம் விரும்பித் துதிசெய்து கைகளைத் தலைமேல் கூப்பி வாழ்த்திப் பின்னர், அக் கடவுளின் திருவடிகளில் நின்முடி படுமாறு தண்டனிட்டு, அறுவர் பயந்த ஆறமர் செல்வ! ஆல்கெழு கடவுட் புதல்வ! மலை மகண் மகனே! முதலிய பல பெயர்களைச் சொல்லி யானறிந்து கூறிய அளவிலே நீ துதித்துவிட்டு, நின் தன்மையெல்லாம் முழுவதும் அளவிட்டறிவது என் போன்ற உயிர்ப் பன்மைகட்கு அரிது ஆகையால் நின் புகழ் என் சொல்லள

வில் அமையாதாகும். நின்னோடு ஒப்பாவார் இல்லாத மெய்ஞ் ஞானத்தை யுடையோனே! "நின் திருவடிப் பேற்றை நினைந்து வந்தேன்" என்று நீ குறித்ததை மொழிவாயாக. அவ்வாறு நீ மொழிவதற்கு முன்னே நீ விண்ணப்பம் செய்ததை மனதிற் கொண்டு வேறு வேறாய பலவடிவினைய குறிய பல பூதகணங்களா யிருப்போர், விழா நடக்கும் அவ்விடத்து வீறுடன் தோன்றுவார்கள்.

தோன்றிய அவர்கள், நினக்காக முருகனை வேண்டிக் கொள்வார்கள். பெருமானே! அறிவு முதிர்ந்தவனும் வாய்மை யுடையவனும் ஆகிய இரவலன் ஒருவன், நின் வளமிக்க புகழினைக் கூற விரும்பிக் கேட்போர்க்கு இனியனவும் உறுதியளிப்பனவுமாக மிகப் பலவற்றைச் சொல்லி வாழ்த்திக் கொண்டு வந்துளான். "அவன் அளிக்கத் தக்கான்" என்பது அவர் வேண்டு கோளாக இருக்கும், பழங்கள் உதிரும் சோலைகளையுடைய மலைக் குரியவனாகிய முருகப் பெருமான், அவ் வேண்டுகோளை யுணர்ந்து தன் தெய்வத் தன்மை யமைந்த வலி விளங்கும் வடிவினையும் வானைத் தீண்டும் உயர்ச்சியும் உடையனாய் அங்குவந்து தோன்றி அச்சம் தரவல்ல தனது பெரு நிலையை உள்ளடக்கிக் கொண்டு பழமையான தன்னுடைய மணம் வீசுகின்ற தெய்வத் தன்மையமைந்த இளமை யழகைக் காட்டி "அஞ்சற்க! நின் வரவை யானறிவேன்" என அன்புடைய நல்மொழிகளால் நின்னைத் தன்னொடு கலக்கச் செய்து இருண்ட கடலால் சூழப்பெற்ற இம் மண்ணுலகத்தில் ஒப்பின்றி நீ மேம்படும் வண்ணம் பெறுதற்கரிய திருவடிப் பேறாகிய அழிவில்லாத பரிசிலைத் தருவான். என்று சீவன் முத்தராம் பெரும் புலவர் கூடி முடித்தார்.

முருகப் பெருமானுடைய பெயர்களைக் கூறுமிடத்து அவன் தோற்றமும் ஆற்றலும் அளியும் தெறலும் அறிவும் விளங்க "அறுவர் பயந்த ஆறமர் செல்வ" என்பது முதல், 'புலமையோய்' என்பது ஈறாக இருபத்தேழு பெயர்களால் விளிக்கச் சொல்கின்றார். இப் பெயர்கள் முருகப் பெருமானுடைய வரலாற்றைச் சுருங்க விளக்குவதாக உள்ளதைக் காண்க.

குறிஞ்சி நிலக் கடவுள் முருகன் என்பதை விளக்க "மலை கிழவோனே" எனக் கூறியவர், அம் மலைக்கு அடையாக இழும் என்னும் ஒலியோடு இழியும் அருவியையும் பழம் உதிர்கின்ற சோலையையும் கூறியுள்ளார். இந்த அடைகளை யூன்றி நோக்கின் இவை வெறும் வருணனைகளல்ல; உயர்ந்த உண்மைகளை விளக்கவே இங்ஙனம் கூறியுள்ளார் என்பது புலப்படும்.

## அருவி.

மலையில், அகிலும் ஆரமும் மூங்கிலும் தேனிறாலும் ஆசினிப் பலாவும் சுரபுன்னையும் கருங் குரங்கும் முசுக்கலையும் பிடியுங்களிறும் பொன்னும் மணியும் வாழையும் தாழையும் மிளகு கொடியும் மயிலும் கோழியும் பன்றி

யும் காடியும் காட்டுப் பசுவும் ஆங்காங்கு நிறைந்துள்ளன. அம்மலை யுச்சியி னின்றும் வீழும் அருவி, அகில் கட்டையைச் சுமந்து கொள்கின்றது; சந்தன மரத்தை யுருட்டுகின்றது; மூங்கிலின் வேரையும் கிழித்துப் பெயர்க் கின்றது; இவ் வருவியின் தாக்குதலால் தேனொழுகத் தேனிறால் சிதைகின் றது; ஆசினிப் பலவின் சுளைகள் அவ் வருவியில் கலக்கின்றன; இவற்றால் அவ் வருவியின் சுவை மிஞ்சுகின்றது. மேலும் அருவியின் அழகு விஞ்சு மாறு சுர புன்னையின் மலர்கள் அதில் உதிர்கின்றன. இவ்வழகிய அருவியின் சுவை யறிந்து உண்ண விழைந்த கருங் குரங்குகள் அருவியின் வேகத்தைக் கண்டு நெருங்காமல் நடுங்குகின்றன. பெண் யானைகளுக்குக் குளிர் மிகுகின் றது. களிற்றின் கொம்புகளைத் தழுவிக் கொள்கின்றது அருவி. மலையில் புதைந்து கிடக்கும் மணிகளை வெளியில் தோன்றுமாறு கிளரிப் பொன்னைக் கொழித்துக் கொண்டு செல்கின்றது. மெல்லியதாகிய வாழை, அருவியின் ஆற்றலுக் காற்றாது ஒடிந்து விழுகின்றது. தெங்கினைத்தாக்கி இளநீர்களை யுதிர்க்கின்றது. மிளகு கொடியின் கரிய கொத்துக்கள் சாய்ந்து விழுகின் றன. அம் மிளகு கொடியின்மேல் மட நடம் பயிற்றிக் கொண்டிருந்த மயில் கள் பலவும் அவ் வருவியைக் கண்டு வெருவி யோடுகின்றன. அவற்றைக் கண்டு கோழிப் பெடையும் ஓடுகின்றது. பன்றிகளும் காடிகளும் மலைக் குகையில் ஒளிந்து கொள்கின்றன. ஆமாவின் நல்ல ஏறுகள் அருவியைக் கண்டு அஞ்சி அலறுகின்றன.

இங்ஙனம் நிகழுமாறு மலை யுச்சியிலிருந்து இழும் என்ற ஒலியோடு அருவி வீழ்கின்றது. அகிலும் சந்தனமும் தேனும் பலாவும் வாழையும் இள நீரும் மலரும் பொன்னும் மணியும் கொண்டு இவ்வருவி செல்வதைக் கண் டால் மலை கிழவோனுக்கு மஞ்சனமாட்டிச் செல்கின்றதோ என்ற எணணம் உண்டாவது இயல்பே. இவ்வருவி, முருகப் பெருமானுடைய அருள் வெள் ளத்தைக் குறிப்பிடுகின்றது. அருவி, மலையிலுள்ள இயங்கு திணையும் நிலத் திணையுமாய உயிர்களிடைக் கலந்து சிலவற்றை எளிதில் தன்னோடு சேர்த் துப் பெருமைப்படுத்தியும் சிலவற்றைத் தாக்கித் தன்னொடு சேர்த்துப் பெரு மைப்படுத்தியும் சில தன்னைக் கண்டவுடன் அஞ்சியோடுமாறும் ஒளியு மாறும் செய்து இழிவுபடுத்தியும் வீழ்கின்றது என்பதைக் கண்டோம்.

முருகப் பெருமானுடைய அருளும், உலகில் பக்குவ முதிர்ந்த உயிர்களை எளிதில் தன்பால் சேர்த்து இன்புறுத்தியும் சிறிதே பக்குவம் வந்த உயிர் களைத் துன்பந்தந்து பக்குவமுதிரச் செய்து தன்னொடு சேர்த்து இன்புறுத்தி யும் பக்குவமே யடையாத உயிர்கள் அஞ்சி யகலுமாறு துன்புறுத்தியும் நிகழும் இயல்பினது; என்னும் உண்மைப் பொருளை அவ்வருவியின் மூலம் புலப்படுத்தினர் புலவர்.

## சோலை.

அவ்வாறு வீழும் அருவியின் ஆற்றலுக்குக் கெடாது தாங்கி நின்ற சோலையில் பழங்கள் உதிர்கின்றன; என்றும் அந்தப் பழமுதிர் சோலையை

யுடைய "மலை கிழவோன்" என்றும் கூறியது, முருகப் பெருமானுடைய அருள் வெள்ளத்தைத் தாங்கி நிற்கும் ஆற்றல் வாய்ந்த உயிர்கள் மெய்ஞ் ஞானம் முதிரப் பெற்று உலகப் பற்றில் நின்றும் விடுதலையடைந்து முருகன் சேவடியாகிய பேரின்பத்தில் திளைக்கும் என்பதை யுணர்த்துகின்றது. மரம் உலகமாகவும், பழங்கள் உயிர்களாகவும் தரை இறைவனாகவும், தரையில் பழங் கள் உதிர்வது, உலகப் பற்றில் நின்றும் விடுதலையடைந்த உயிர்கள், இறைவ னடியில் இயைவதாகவும் கொள்க. மரத்திற்கு ஆதாரமாய் உரந்தருவதும் அதன் மூலம் பழத்திற்கு வளம் தருவதும் முதிர்ந்த பின் இழுப்பு ஆற்றலால் தன் மாட்டு வீழச் செய்வதும் தரையே யாதல்போல உலகிற்கு ஆதாரமாய் நின்று ஊற்றமளித்தும் அதன் மூலம் உயிர்களுக்குப் பக்குவத்தைக் கொடுத் தும் அருளாற்றலால் அவ்வுயிர்களைத் தன்னடியில் சேர்த்தும் வருபவன் இறைவனே யாதல் தெளிக. இங்ஙனம் உயர்ந்த கருத்துக்களை நோக்கி யுணர வைப்பது பெரும் புலவர் திறனாகும். இவ் வருணனைகள் இத்தகைய சிறந்த கருத்துக்களை விளக்காவிடின் பெரும் பயனில்லாத சொற்களைப் புலவர் கூறியதாக முடியும். ஆற்றுப்படுத்தும் சீவன் முத்தராம் பெரும் புலவர், இறை வனுடைய மூவகை நிலைகளையும் அந் நிலைகளை யுணர்ந்து வழிபடுவார் மூவகை நிலையினையும் உணர்த்திய காரணத்தால் இத் திருமுருகாற்றுப்படை அறுவகை யாகப் பகுத்துக் கூறப்பட்ட தென்க.

•இவ்வாறு கொள்ளாது 'அறுவகைத் தலங்களைக் குறிக்கவே அறுவகை யாகக் கூறப்பட்டது' என்று கொள்வோமாயின் 'குன்றுதோறாடல்' ஒரு தலமாகாமையும் காடுங்காவும் கவின்பெறு துருத்தியும் யாறுங்குளனும் முதலிய பலவாக எண்ணப்பட்ட இடங்கள் இவ்வரையறைக் குட்படாமையும் முரணுமாறறிக.

இனி, இவ்வாற்றுப்படை அறுவகையாகப் பகுத்ததற்கு வேறு காரண மும் கூறலாம். இறைவனுடைய அறிவு செயல் இச்சை, என்ற மூவகை யாற்றலில் அறிவாற்றல் விஞ்சித் தோன்றும் நிலையைப் பரங்குன்றத்திலும் செயலாற்றல் விஞ்சித் தோன்றும் நிலையைத் திருச்சீரலைவாயிலும் இச்சை யாற்றல் விஞ்சித் தோன்றும் நிலையைத் திருவாவினன்குடியிலும் வைத்து விளக்கினாரெனவும் திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை ஆகிய மூன்று பகுதிகளில் அம் முருகனை அறிவால் வழிபடுவோர், செயலால் வழி படுவோர், இச்சையால் வழிபடுவோர் ஆகிய மூவகையார் நிலைகளை விளக்கினா ரெனவும் கொள்ளலாம்.

## ஞான நிலை.

திருப்பரங் குன்றத்தில்: முருகனுடைய உருவ முதலியன சொல்லப் படாமல் மல மாசு நீங்கப் பெற்ற தூய ஆன்மாக்கள் சூழ இருக்கின்றான் என்னும் கருத்தை யுணர்த்தும் "அரிக்கணமொலிக்கும் குன்றமர்ந் துறை தலு முரியன்" என்றே சொல்லி யிருத்தலின் அங்கு அறிவாற்றல் விஞ்ச

முருகப் பெருமான் ‘ஞான நிலை’யில் விளங்குகின்றான் என்பதையே விளக்கினார் என்று கொள்ளலாம். ஞானமே வடிவாய ஆன்மாக்களால் சூழப் பெறுதல் ஞான நிலைக்கே பொருத்தமாதல் காண்க.

## கிரியை நிலை.

திருச்சீரலைவாயில்; முருகப் பெருமானுடைய ஆறு திருமுகங்கள் செய்யும் தொழிலையும் பன்னிருகரங்கள் செய்யும் தொழிலையுமே விரிவாகக் கூறியிருத்தலாலும், முருகன் யானைமேலூர்ந்து செல்லும் செயலையே சிறப்பாகக் கூறி யிருத்தலாலும் முருகனது செயலாற்றல் விஞ்சிய ‘கிரியை நிலையே’ விளக்கப்பட்டது என்பதை யுணரலாம்.

## இச்சை நிலை.

திருவாவினன்குடியில்:, திருமால் முதலிய தேவர்கள் வணங்க “மடந்தையொடு சின்னாள் தங்குவதாகக் கூறப்படுவதால் இச்சை நிலை விளக்கப் பட்டதாகக் கொள்ளலாம். மடந்தையொடு தங்குதற்குக் காரணம் இச்சையே யாதல் தெளிவு.

## ஞான வழிபாடு.

திருவேரகத்தில்: அந்தணர் ஆறெழுத் தடக்கிய அருமறையை நாவியல் மருங்கின் நவிலப்பாடி வழிபடுவதாகச் சொல்லப்படுவதால் அவ்வந்தணர் முருகனை ஞானத்தால் வழிபடுகின்றார் என்பது விளங்கும்.

## கிரியை வழிபாடு.

குன்றுதோறாடலில்: வேலன், முருகன் வேடந் தாங்கி மகளிரோடு கூடிக் குரவையாடி வழிபட்டதாகச் சொல்லப்படுவதால் அவ்வேலன் கிரியையால் வழிபட்டமை தெளிவாம். ஆடல் கிரியையாதல் தெளிவு.

## இச்சை வழிபாடு.

பழமுதிர் சோலையில் குறப்பெண், தன் முன்னிலையில் முருகன் வரல் வேண்டுமெனவும் நல் நகர் வாழவேண்டும் எனவும் விரும்பி வழிபட்டாள் என்று கூறியிருத்தலால் அவள் இச்சையால் வழிபட்டாள் என்பது பெறப்படும். ‘பெண் என்னுஞ் சொல்லே பெட்பு (இச்சை) உடையவள் என்பதை விளக்குதலும் அறிக.

இனி, இவ்வாறன்றித் திருப்பரங்குன்றத்தில் முருகன் வடிவம் யாதும் கூறப் பெறாமையால், அவன் அருவாய் நிற்கும் நிலையை யுணர்த்தியதாகவும், திருச்சீரலை வாயில் ஆறு முகமும் பன்னிருகையும் உடையனாக முருகன் கூறப்படுவதால் அம் முருகன் அருவ நிலையை விடுத்து உயிர்கள்

பொருட்டு மேற் கொண்ட உருவ நிலையை யுணர்த்தியதாகவும், திரு வாவினன்குடியில் திருமால், உருத்திரன், இந்திரன், முப்பத்து முக்கோடி தேவர் முதலியோர் சென்று முருகனைத் தரிசித்ததாகக் கூறியிருத்தலால் உயிர் வருக்கத்தில் உயர்ந்தோராகிய தேவர் வழிபட நிற்கும் நிலையினை யுணர்த்தியதாகவும், திருவேரகத்தில் அந்தணர் மந்திரமோதி மலர்தூவி வழி பட்ட முறையைக் கூறியதால் பூதேவர் என்று புகழப்படும் செந்தண்மை வாய்ந்த அந்தணராகிய மக்களுள் உயர்ந்தோர் வழிபட நிற்கும் நிலையினை யுணர்த்தியதாகவும், குன்றுதோறாடலில் குறவனுகிய வேலன் வழிபாடே கூறியிருத்தலால் மக்களில் இழிந்தோரும் வழிபட நிற்கும் நிலையினை யுணர்த் தியதாகவும். பழமுதிர் சோலையில் குறமகள் வழிபாடே சிறப்பாகக் கூறி யிருத்தலால் பெண்டிர்க்கு முத்தியில்லை என்பாரை மறுக்கப் பெண்களும் வழிபட நிற்கும் நிலையை யுணர்த்தியதாகவும் கொள்ளலாம்.

இதனுல் முருகன், அருவாயும் உருவாயும் நின்று தேவரும் மக்களில் உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் பெண்டிரும் தத்தம் நிலைமைக் கேற்ப வழிபட அருள் செய்கின்றுன் என்பதும் பிறப்பானும் பிற சிறப்பானும் வேறுபாடு இருப்பினும் வழிபடுவோர் எல்லோர்க்கும் பொதுவாகிய அன்பு ஒன்றே அம் முருகப் பெருமானுக்கு வேண்டுவது என்பதும் விளங்கும்.

இவ்வாறு முருகப் பெருமானுடைய நிலைகளை யறிந்த வீடு விரும்பிய புலவன். தன் தகுதிக்கேற்ற இடத்தில் இறைவனை உணர்ந்து இறைஞ்சி வீடு பெறுவான் என்பது சிவன் முத்தாய் பெரும் புலவரின் துணிவு.

இத்தகைய கருத்துக்களை யாழ்ந்து நோக்கி யுணர்ந்து கொள்ளுமாறு பொக்கமில் புலவர் நக்கீரனுர், திருமுருகாற்றுப்படையை யியற்றியுள்ளார் என்க. என் சிற்றறிவில் தோன்றிய சில கருத்துக்களை இங்கு வெளிப் படுத்தி யுள்ளேன். இன்னும் ஆழ்ந்து நோக்கும் அறிஞர்கட்குப் புதிய பல கருத்துக்கள் புலப்படும் என்பது என் திண்ணமான எண்ணம். அறிஞர்கள் என் குறையைப் பொறுப்பார்கள் என்னும் நம்பிக்கை யுடையேன்.

வாழ்க நக்கீரனுர் வாக்கு !

—:o:—